கடவுள் துணை.

# சர்வசமயசமரசக்

# கீர்த்தனைகள்.

இவை

மாயூரம் மாஜிமுன்சீப்

## ச - வேதநாயகம்பிள்ளை

அவர்களாலியற்றிய கீர்த்தனைகள்

(-)

சென்னை-இட்டா.

## பார்த்தசாரதிநாயுடு

அவர்களால் மது

ஸ்ரீ பத்மநாபவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

(*)

நெ. 1. திருப்பள்ளிசந்து பெத்துநாய்க்கன் பேட்டை.

MADRAS.

1899.

உ

கடவுள்துணை.

# சர்வசமய சமரச ஸ்தோத்திரம்.

பன்னிருசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சீர்கொண் டிலங்கிடும் சிருட்டிதிதி சம்மாரஞ்
செய்ய முக்குண வஸ்துவாய்
செப்பரிய சுகுணமாய் நிர்க்குணத தாகார
தீண்டிடா ஞானவொளியாய்
பார்கொண் டிலங்கிடும் யாவையுந் தந்தாளும்
பரனாய் பரஞ்சுடருமாய்
பக்தரி னுளத்தினி லாடுந்தெய்வீகனாய்
பாவமெனுந் திமிரமோட
பேர்கொண் டிலங்கிடும் தாரகம தாய்வேதம்
பேசரிய கலையாகியே
பெட்புநிறை யானந்த முச்சுட்ரு மாய்நின்ற
பெருமை நிறையாவும் வல்ல
வார்கொண் டிலங்கிடும் தாதாவுமாகிய
வள்ளலே கருணைதரவே
வந்துமது சுந்த்ரபதந் தந்தருள் நிந்தையகல
மாசிலா ஜகதீசனே. (க)

எங்கும் நிராதார நிர்க்குண நிராலம்ப
ஏகாந்த காருண்ணிய
மென்றுந் துலங்கிட மனோதீத மதினினைந்
தெழிலாகும் பரமகுருவாய்
துங்கமெனு மெய்ஞ்ஞான தீபமாயடியவர்
துகளனைத்துந் தீர்த்தரு
டுய்யசை தந்யமாய் திருமறைக ளோதிதொழும்
கத்தசின் மயவடிவமாய்
புங்கவர்க ளென்றுந்துதி செய்திடுங்காரணப்
பூரணப் பொருளுமாகி
போதங்க ளியாவுக்கு முதன்மையாய் நின்றொழுகும்
புண்ணியவாழ் வதனையென்றும்

மங்களாகர மாகவருள் மனோதீதனே
 வள்ளலே கருணைதரவே
வந்துமது சுந்த்ரபதந் தந்தருள் நிந்தையகல
 மாசிலா ஜகதீசனே. (௨)

பூதலமெலாம்பரவு நாத நாதாந்தனே
 பொற்பிலகு மானந்தனே
புகழ்தங்கும் ஞானகாருண்ணியனே தொண்டரின்
 புரையனைத்தையுந் தீர்த்திடும்
வேதனே வேதாந்த சமரசக்கியானியர்கள்
 விரும்பியே துதிபராவும்
விமலனே அமலனே வித்தக நிர்ராலம்ப
 விபுதனே சுகுணமலியும்
போதனே பூசுரர்க ளுளமதனிலே நீடும்
 பூரணா னந்தவாழ்வே
போக்குவர வில்லாத புண்ய கருணாம்பரா
 பொய்யிலா துண்மை வடிவே
வாதனையு மும்மலச் சேட்டையுமொழித்திட
 வள்ளலே கருணைதரவே
வந்துமது சுந்த்ரபதந் தந்தருள நிந்தையகல
 மாசிலா ஜெகதீசனே. (௩)

அண்டர்கள் பணிசெய்யு மாதிமத்யாந்தகா
 அற்புதா கரசிலனே
அவனியுட னதிலுள தியாவையு மமைத்தருளும்
 ஆனந்தமறைமூலனே
பண்டைவினை யாவையும் தீர்த்தாண்டு கருணைதரும்
 பரனே நிரந்த்ரவடிவே
பகரறிய சுகுணமே பதமருளும் நம்பனே
 பக்ஷமது வைத்தருள் செய்வாய்
எண்டிசையும் துதிமலியும் ஏகவைபோகனே
 ஏதிலார்க்கருள் தியாகனே
எப்பாரு முனதளியிலாமல் திகழாதெனவே
 என்னுளம் நினைந்துருகலால்
மண்டல மெலாம்புகழ சமரசக்கீர்த்தனை
 வழுத்தினேன் கருணைதரவே
வந்துமது சுந்த்ரபதந் தந்தருள் நிந்தையகல
 மாசிலா ஜகதீசனே. (௪)

உ

கடவுள் துணை.

# சர்வசமய சமரசக் கீர்த்தனை.

## 1. இராகம் - தேவகாந்தாரி - ஆதிதாளம்.

பல்லவி.

எக்காலமும் உன்தன் பொற்கால்பணிந்துகொண்
டிருக்கநீவரம்அருள்வாய். (எக்கா)

அநுபல்லவி.

தக்கோர்அபிமான ஞானசீலா
சகலபுவனரக்ஷ காநுகூலா. (எக்கா)

சரணங்கள்.

சந்தமேவுபிர பந்தமாலைபாடி
கந்தமார்உன்அர விந்தபாதம்சூடி
வந்தனுதிகள் அநந்தமேசொலி
விழுந்துபூமியில் எழுந்துநைந்துருகி. (எக்கா)

துங்கசாதுஜன சங்கமோடுகூடி
பொங்குஞ்ஞான அகளங்கவாரிஆடி
அங்கமேபரவ சங்கொளப்பலப
தங்களோடுசுப மங்களங்கள்சொலி. (எக்கா)

பழுதிலாதுதினம் முழுதும்உன்னைநாடி
தொழுதுநேசமுடன் அழுதுபாடிஆடி
ஒழுகுசெந்தழலின் மெழுகுபோலமனம்
இளகியேஅதிக புளகிதாங்கமுடன். (எக்கா)

பூதலம்பரவு பாதவேதநாதா
சாதகம்செயும் அபேதநீததாதா
போதநாயகனே பூதநாயகனே
கீதநாயகனே வேதநாயகனே. (எக்கா)

## 2. இராகம்-துசாவந்தி-ஆதிதாளம்.

பல்லவி.

ஓடிநான்உனைத் தேடிவந்தேன்-எனக்
குதவிசெய்தருள் ஐயனே- (ஓடி

அநுபல்லவி.

நாடிஉன்பதம் தொட்டேன்
கோடிதரம் கும்பிட்டேன்
நாதவிநோத பிரசாதபிரபோத
அபேதஅதீத நிர்வாகியாதனே. (ஓடி

சரணங்கள்.

1. அற்பமானபதார்த்தம்-சற்றும்விரும்பேன்
ஐயாஇது யதார்த்தம்
அற்புதபரமார்த்தம் - கொடுத்தருளில்
அதுவேஉப யோகார்த்தம்
பறபல விசித்திரனே
கற்பனு சமுத்திரனே
பாச விநாச சுரேச நரேச
பிரகாச விகாச உலாச விலாசனே. (ஓடி

2. வந்துனையேஅடுத்தேன் - கீர்த்தனமாலை
வகைவகை நான்தொடுத்தேன்
வந்தனம்கைஎடுத்தேன் நீவசிக்கஎன்
மனக்கோயிலுங்கொடுத்தேன்
அந்தமனே உனக்கே
உன்தன் மனேஎனக்கே
ஆய விதேயர்கள் நேயசகாய
அகாய உபாய நியாய விதாயனே. (ஓடி

3. அன்பர்உபாசனனே-பூதலந்தன்னில்
அதர்ம விமோசனனே
இன்பநிவேசனனே - வேதநாயகன்
இதய சிம்மாசனனே
என்பவங்களைத் தீர்ப்பாய்
உன்பதந் தன்னிற்சேர்ப்பாய்
ஏக அநேக திரிலோக நிர்வாக
தெய்வீக விவேக அமோக தியாகனே. (ஓடி

3. இராகம்-கேதாரகௌளம்-ஆதிதாளம்.

பல்லவி.

எனை ஆதரிப்பாயே - என்மனஇருள்
தனையே பிரிப்பாயே. (எனை)

அநுபல்லவி.

வினையே அரிக்கும்செல்லா
விண்ணான் ஒருபுல்லா
நினையா என்மனம்கல்லா
நிதம் அதனுடன்மல்லா
நிச்சயப்பிர போதனே
அக்ஷயப் பிரக்கியாதனே
சஜ்ஜனப் பிரசாதனே
துர்ஜ்ஜனப் பிரமாதனே. (எனை)

சரணங்கள்.

1. துக்கப்பிர பஞ்சத்தொல்லை
சொல்வதற் குண்டோஎல்லை
திக்குவே றெனக்கில்லை
தெய்வமேகேள் என்சொல்லை
சிஷ்டர் சமுதாயனே
துஷ்டர்கள் அபாயனே
இஷ்டர்கள் சகாயனே
அஷ்டகுண நேயனே. (எனை)

2. அடியனான் வினைவசம்
ஆயினன் இதுநிசம்
படியிற் கருணாரசம்
பாலித் தருள்கவசம்
பக்தஜன நேசனே
சுத்தமன வாசனே
சித்தமல நாசனே
வித்தக விலாசனே. (எனை)

3. மருவிய பாசவலை
மாட்டி உற்றேன்கவலை
தரும சைதன்னியநிலை
தந்தென மயக்கந்தொலை

சங்கட நிவாரகா
எங்கள்குல தாரகா
பொங்குசுக தாயகா
துங்கவேத நாயகா (எனை)

---

இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

சித்தம்உவந்தருள்செய்ய-இத்தனைதாமதமேது
சீலனேபுவனபரி - பாலனேமூலனேநீயுன். (சித்தம்)

அநுபல்லவி.

நித்தனேபுவியெங்கும்பிர-சித்தனேநீகிலலோக
கத்தனேஜீவகோடிகட்-கத்தனேசுத்தனேநீயுன். (சித்தம்)

சரணங்கள்.

1. அசடனெனென்பதென்ன ரகசியமா-பெற்ற
அன்னையிடம்உண்மை சொல்லவேபயமா
வசனஞ்செய்வதருள துனக்கோர்விஷயமா-யாவும்
வல்லஉனக்கிதென்ன அதிசயமா
வசனசாதுரியனே
மன்னமாதுரியனே
சுஜனர்கள்பிரியனே
சுரர்தொழும்பெரியனே. (சித்தம்)

2. நிதமும்உனதுபத கைங்கரியமே-செய்ய
நீயருளெனக்குச் சுதந்திரியமே
அதுவேயெனக்குப்பெரும் சௌகரியமே-இனி
ஐயனேவேண்டேன் வேறுஐசுவரியமே.
அதிசய அப்பிரமேயா
அகணித சுப்பிரகாயா
விதிநெறி செப்பும்வாயா
விநய சங்கற்பதூயா. (சித்தம்)

3. பூதபௌதிகமெல்லாம் நிறைவோனே-நல்ல
புண்ணியத்திருமறையை அறைவோனே
வேதநாயகன்மனம் உறைவோனே-ஞான
விழியில்லாதவருக்கு மறைவோனே

போதகப்பிர காசனே
புண்ணியப் பிரதேசனே
சாதகக்கிரு பேசனே
தாசருட் பிரவேசனே (சித்தம்)

---

5-இராகம்-அசாவேரி-ஆதிதாளம்
பல்லவி.

உன்னிடத்திற்சொல்லாமல் யாரிடத்திற்சொல்லுவேன்.
ஓ-ஓ-ஜகதீசா
அநுபல்லவி

பொன்னிடத்தாசையறு புனிதர்கள்தமக்கின்பம்
பொழிதருவேஇந்தப் புவியில்நான்படுந் துன்பம் (உன்னி)

சரணங்கள்.

வயிறுபசிக்கும்பிள்ளை மாதாஇடம்போமன்றி
மற்றொருவரிடத்திற் சேருமோ-நாளும்
அயர்வுறும்பெரும்பிணி அருமருந்தாலன்றி
அயலொன்றினாலே அதுதீருமோ-கன

வெயிலால் வருந்துவோரே
வேண்டுவர் நிழல்நீரே
உயிர்ப்பயி ரோம்புங்காரே
உனையன்றிக் கதியாரே

உலைவுறுசல்லடை போற்பலவோட்டை
உளதாகியவெறும்புழுமலக்கூட்டை
நிலையெனமனக்கவி செயும்பலசேட்டை
நித்தியம்நானதனாற்படும்பாட்டை (உன்னி)

நாதனேநான்பிழை யாதுசெய்யினும்நின்னை
நம்பினேன்என்மேலின்னம் க்ஷாத்திரமா.பாரில்
ஓதரும்புலச்சத்து ராதியர்கையில்என்னை
ஒப்புவிக்குதல்தர்ம சாஸ்திரமா-மறு

மாதர்மேற் செல்லும்நேத்திரம்
வாயேஅபத்த பாத்திரம்
தீதுரைகொள்ளுஞ் சுரோத்திரம்
சிற்றின்பம் வேண்டுங்காத்திரம்

தீயஅவயவங்கள் செயுந்தினமோசம்
சிந்தையிற்குடிகொண்ட தாசாபாசம்
நாயேன்செய்கைகளே ஆபாசம்
நான்குபக்கத்திலும் நான்படுங்கிலேசம் (உன்னி)

3. எத்தனைசுமைபாவம் வேண்டுமானாலுமுந்தி
எனக்குக்கொடுக்கலாம் அச்சாரமே-என்தன்
அத்தனேநானுன்சேயென்றறிந்தும்நோய்செய்யுமாயைக்
கார்தந்தார்இந்த அதிகாரமே-சர்வ

உத்தமஞ்சேர் நிர்தோஷ-
உன்னதமா விசேஷ
பத்தர்நித்திய சந்தோஷ
பரசமயத்து வேஷ

பாக்கியமலர்ந்தருள் பழுக்கும்உத்தியான
பலபுவனத்மகோ டிகள்அபிமான
ஆக்கியவேத நாயகன்ஸ்வாதீன
அனைதந்தைகுருதெய்வஞ்சகலமுமான (உன்னி)

6. இராகம்-பூரணகௌளை-ஏகதாளம்.

பல்லவி

என்பிழைகள் பொறுத்தருள்வாய்-எனைஅலைக்கும்
துன்பவினை அறுத்தருள்வாய்.

அநுபல்லவி

முன்பரவியே ஜெபிக்கும்
அன்பர்கள் அனுபவிக்கும்
இன்பமே அவர்விரும்பும்
நின்பதகமலம் நம்பும் (என்)

சரணங்கள்.

1. நேயனைப்போல்விவகரிப்பேன்-துதிகவிகள்
ஆயிரம்உண்டாக்கிவிரிப்பேன்-என்செய்கைஎல்லாம்
வாயின்அன்பலாதுமனங்-தோயும்அன்புளதோசிறு
நாயின்அன்புமேயிலாமல்-தீயவம்பனாய்த்திரியும். (என்)

எண்ணவொண்ணுமோஎன்பவமே-ஐயனே இந்த
மண்ணினில்என்ஜன்மம்அவமே-தினந்தினமும்
உண்ணலும்நித்திராதனே-நண்ணலும்பெரும்பவங்கள்
பண்ணலும்அல்லாதுன்பதம்-எண்ணல்செய்தறியேன்ஸ்வாமி.

போதகம்என்னிடம்லயமே-என்மனம்பஞ்ச
பாதகங்கட்காலயமே-புவனமிசை
மாதவம்புரிபவர்க்குக்-கோதகலும்இகபர
சாதகங்கொடுத்தருளும்-வேதநாயகாஇறங்கி. (என்)

---

7. இராகம்-சுப்பிரதீபம்-திரிபுடை.

பல்லவி.

வினேயே எனேயே மேவாதருளே.

அநுபல்லவி.

நினேயேநம்பினேன் னின்மலப்பொருளே

சரணங்கள்.

கனவிலுந்தருமத்தைக் கண்டறியேனே
அனவரதமும்உன தருள்கூறியேனே. (வினே)

பாவமென்பதற்கொரு பதியானேனே
ஜீவனும்வழிதெரி யாமற்போனேனே

உதரபோஷணேயன்றி உனேநினேயேனே
இதயந்தன்னில்உன்னடி இணேபுனேயேனே. (வினே)

பூதலர்தொழும்அதி புண்ணியர்மித்திரனே
வேதநாயகன்தொழும் விமலபத்திரனே. (வினே)

---

8. இராகம்-பரசு-ரூபகம்.

பல்லவி.

ஆண்டருளே-கருணே-பூண்டருளே

அநுபல்லவி.

தூண்டருஞ் சுடராக விளங்கும்
சோதியே-உயர்-நீதியே எனே. (ஆண்ட)

சரணங்கள்.

1. என்னை ஆள்வது பாரமா எனை
இடம்வர வெகு தூரமா
அன்னைக்கும் உப சாரமா எனக்
கருள்புரிய இந் நேரமா கன
ஆரியனே-மெய்ஞ்ஞான
சூரியனே-சர்வலோக
காரியனே-மிகுந்தஜை
தாரியனே-ஜகந்தனில்
உன்னையல்லது பின்னையார் துணை
யோகனே-சுக-போகனே-எனை. (ஆண்ட)

2. எனதுடலெனும் புல்லையே காக்க
எவர்க்குங் காட்டுவேன் பல்லையே
தினமும் ஆயிரந் தொல்லையே இதில்
சிறிது மேசுகம் இல்லையே கன
சேதனனே-பெரியபு
ராதனனே-பரமநி
கேதனனே-மெய்ஞ்ஞான
சாதனனே-அநுதினம்
நினது பாதம் நம்பினேன் அதி
நேசனே-பிர-காசனே-எனை. (ஆண்ட)

3. பொறுமை உனக்குச் சொந்தமே நான்
புரியும்பிழை அநந்தமே
மறுமையுறு நிர்ப்பந்தமே கெட
பலர் பாதார விந்தமே கன
மாக்ஷியனே-அடியர்கண்
காக்ஷியனே-சர்வாண்ட
சாக்ஷியனே-தனிஅர
சாக்ஷியனே-தினந்தினம்
சிறுவன் வேதநாயகன் பணி
சீர்த்தியே-அற-மூர்த்தியே-எனை. (ஆண்ட)

—(*)—

9. இராகம்-மோகனம்-திரிபுடைதாளம்.

பல்லவி.

காக்ஷியெனக்குக் கொடாமலிருக்கின்ற
காரணம் ஏதையா. (காக்ஷி)

அநுபல்லவி.

சாக்ஷியாய்நிற்கும் சருவாதிகாரனே
மாக்ஷியுடையோர்மகிழ் நிர்விகாரனே (காக்ஷி)

1. அந்தரங்கபதி அற்றவனென்றோ
அக்கிரமத்தில்பெயர் பெற்றவனென்றோ
பந்தப்பேய்க்குள்ளத்தை விற்றவனென்றோ
பாதகங்களெல்லாங் கற்றவனென்றோ. (காக்ஷி)

2. மறந்தும்ஒருமெய்சொல் லாதவனென்றோ
மருந்துக்கும்நன்மைஇல் லாதவனென்றோ
சிறந்தமெய்ஞ்ஞானங்கல் லாதவனென்றோ
தேசத்தார்க்கெல்லாம்பொல் லாதவனென்றோ. (காக்ஷி)

3. ஏசிமறையை இகழ்ந்தவனென்றோ
ஈனமதத்தைப் புகழ்ந்தவனென்றோ
நீசெய்தநன்றி மறந்தவனென்றோ
நீசற்குள்மெத்தச் சிறந்தவனென்றோ. (காக்ஷி)

4 ஆதிமத்தியாந்த ரஹிதமகேசா
அற்புதசின்மயா னந்தவிலாசா
வேதவேதாந்த விதிஉபதேசா
வேதநாயகன் இதயப்பிரகாசா. (காக்ஷி)

---

10. இராகம்-நாதநாமக்கிரியை ரூபகதாளம்.

பல்லவி,

அருள்புரிவாயே-எனதுள
மருள்தெரிவாயே.

அநுபல்லவி.

இருளை நிகரும் சுருள் கொள்ஓதியர்
இலகும்பொருள்-உலகம்புரி-கலகம்படர்-விலகும்படி (அருள்)

சரணங்கள்.

1. நினைவெல்லாம் உன்நினைவதாயென் நெஞ்சம்உன்னுதோ-பழி
புனையும்வாய்வெறும் பேச்சைவிட்டுனைப் புகழ்ந்துபன்னுதோ
திணையளவு மெய்தனைவிடாது [சிறு
சிந்தித்துனை-வந்தித்திடு-புத்தித்திடம்-வந்துற்றிட. (அருள்)

2. எத்திசையும் உன்னுருவமாகவே இலகக்காணேனோ-சொந்த
அத்தம்யாவும்நீயென்றேமிக ஆசைபூணேனோ-கன
பத்தியாயுனை நித்தம்போற்றிப்
பாடித்தினம்-நாடித்தவம்-நீடிக்கதி கூடிக்கொள. (அருள்)

3. நீதமாயரும் போதமாயெங்கும் நிறையுங்கர்த்தாவே-நாளும்
வேதநாயகன் காதல்மனப்பெண் மேவும்பர்த்தாவே-கொண்ட
ஏதமரப்பிர சாதம்உதவி
இழிவண்டிய-பழிவிண்டெல்-வழிகொண்டுனை விழிகண்டிட. ()

## 11. இராகம்-மணிரங்கு-திரிபுடைதாளம்.

பல்லவி.

சித்தம்இரங்கிநல் முத்தர்தங்கோஷ்டியிற்
சேர்த்தெனைக் காத்தருளே

அநுபல்லவி.

உத்தமசீலர்தஞ் சித்தமலர்உறை
வோனே-கோனே-வானே-தேனே. (சித்த)

சரணங்கள்.

1. நின்னடித்தொண்டனு னென்னஅறியும்
நிதம் உலகந்தானே
என்னஉன்தொண்டின் பலனென்றெனைப்புவி
ஏசில்என்சொல்வேனே
பன்னரும் உன்னருள் என்னருகாகிடப்
பண்ணே-கண்ணே-எண்ணே-விண்ணே. (சித்த)

2. பொய்த்தெய்வந்தங்களைப் போற்றிப்பெரும்பழி
பூண்டவர்தம்முனமே
மெய்த்தெய்வம்உன்னைத் தொழும்எனக்கென்ன
விசேஷப் பிரயோஜனமே
கைத்தொழிலஅண்டம் அனைத்தையுந்தாங்கிடு
கையா-துய்யா-மெய்யா-ஐயா. (சித்த)

3. கழுவக்கழுவ அழுக்குடல்மீது
கலந்திடருந் தன்மையே
தழுவிஎன்னெஞ்சுறு மாசுகள்நீங்கிடத்
தந்தருள்வாய் நன்மையே
எழுமன்பொடுவேத நாயகன்போற்றிடும்
ஏகா-யோகா-வாகா-தியாகா. (சித்த)



## 12. இராகம்-தர்பார்-திரிபுடை-தாளம்.

பல்லவி.

என்னை ஆளையா-என்விண்ணப்பம்
தன்னைக்-கேளையா.

அநுபல்லவி.

மின்னைநிகரும்வாழ்வை வெறுப்பவர்க்குரியோனே
அன்னைபிதாசற்குரு வாகியபெரியோனே. (என்னை)

சரணங்கள்.

1. அடியன்மேற்சினமா - என்குறைநீக்கி
ஆள்வதுகனமா
கடினம்நின்மனமா - எனதுநெஞ்சங்
கவலைக்காசனமா

படியில்என்னகத்துறு பாவஇருளைமாற்றித்
திடமுறவேமெய்ஞ்ஞான தீபமதனையேற்றி. (என்னை)

2. என்றுஞ்சஞ்சலமா - ஐயனேமாயைக்
கிவளவுபலமா
வென்றுகொள்புலமா - அதனால்ஏழை
மெலிவதுநலமா

நன்றுருவாகியநாதா என்முகம்நோக்கிக்
குன்றெனநான்செயுங் கொடுவினைகளைப்போக்கி. (என்னை)

3. கைவிடலாமா - என்னிடம்வரக்
கால்மலர்நோமா
நைவினைபோமா - இனிமைதங்கும்
நன்னயநாமா

தெய்வநாயகனாகித் திகழுறும்அகளங்கா
கைவல்லியஞானநெறிகமழ்மதுரப்பிரசங்கா. (என்னை)

4. தித்திக்குந்தேனே - அமுதேகன
தேவர்கள்கோனே
எத்திக்குந்தானே - எள்ளுமெண்ணெய்போல்
இருக்குங்கோமானே
புத்தியுடையோர்சூட்டும் புகழ்மாலைஅணிவோனே
பத்தியுடனேவேதநாயகன் பணிவோனே. (என்னை)



13. இராகம்-கல்யாணி-ரூபகதாளம்.

பல்லவி.

தருணங்களைபுரிகுவாய்-ஐயா-உனக்கனந்தங்கோடி
சரணஞ்சரணந்-தெரிகுவாய்-மெய்யா

அநுபல்லவி.

அருணகோடி தேஜோமயனே - பொன்
திரணமென்றுன்னுவோர்பயனே - இத் (தருணங்)

சரணங்கள்.

1. இந்திரியச்சத்துருக்கள் செய்மோசம்
என்னசெய்வேனிவர்வகித்தல் பிரயாசம்
நிந்தனையானஅநு பந்தபாசம்
நீங்கச்செய்வாய்புண்ணிய உபதேசம்
நீயேகதியன்றோ ஒரு
தாயேதுயர்ஒன்றோ சிறு
நாயேன்கெடல்நன்றோ கன
தீயேன்உடல்குன்றோ இது (தருணங்)

2. கோரமாய்த்தன்பிள்ளைசெய்யினுந் தீது
கோபித்துநீக்கிடுந்தாயுண்டோ ஓது
காரமாநான்செயும்பாவம்பொ றுது
கைவிடில்வேறெனக்காதர வேது
காயத்தைஎடுத்தேன் அரு
மாயத்தைஅடுத்தேன் அறி
யாயத்தைஉடுத்தேன் திரு
நேயத்தைவிடுத்தேன் இது (தருணங்)

3. நச்சுமரத்தையும்வைத்தவன் தானே
நாள்தோறுங்காவல்செய்யாமல்இ ரானே
இச்சகமீதில்எனைஅமைத் தோனே
என்னைநீஆளாவிடிற்பிழை போனே

ஏகந்தழையுருவே சுக
போகந்தழைதருகவே கன
யோகந்தழைதிருவே முதிர்
பாகந்தழைகுருவே இது (தருணம்)

4. நிதமும்நானும் பாதகச்-சேறு
நீக்கிடப்போதுமோநின்னருள்-ஆறு
விதியுங்கதியும்இல்லையே-வேறு
வேதநாயகனேஅருள்-பேறு

வேதத்துருவோனே பல
பூதப்பெருமானே கன
போதத்தமர்கோனே இரு
பாதத்தைவிடேனே இது (தருணம்)

---

14. இராகம்-தேசிகதோடி-ஆதிதாளம்.

பல்லவி.

ஐயாளனை ஆண்டருளே-உனை
அண்டினனே-மனம்-வெண்டினனே. (ஐயா)

அநுபல்லவி.

பொய்யாம்வாழ்வினில்நான்குழையாமல
போகாதிகளில்என்மனம்நுழையாமல் (ஐயா)

சரணங்கள்.

1. ஒருநிமிஷமுமுனதடிமறவாமல்
உலகழியினுமுனதருள் துறவாமல்
இருதயமதனிலோரிடர்பிறவாமல்
இழிவுறுபழியொடுநானிறவாமல். (ஐயா)

2. உன்னையலாதொருவரையும்தொழாமல்
உதரநிமித்தம்எங்குமஓடியழாமல்
இந்நிலமீதுதுராசைஎழாமல்
இறந்தபின்னுனெரிநரகில்விழாமல். (ஐயா)

3. நல்வழிதனைஎந்நாளும்விடாமல்
நாட்டில்அசடனெனநான்பேரெடாமல்
பல்வகையாகியபழிகள்தொடாமல்
பாவையர்மோகத்தில்படிந்துகெடாமல். (ஐயா)

4. என்னுயிர்போல எவ்வுயிரையும்பேண
இகசுகபோகத்தை என்றுமேநாண
மின்னுங்குணபூர ணந்தனைப்பூண
வேதநாயகனே நானுந்தனைக்காண. (ஐயா)

---

15. இராகம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி.

இந்தவரந்தருவாய் - ஸ்வாமி - இந்த

அநுபல்லவி.

பந்தவினையெலாம் அறவேண்டும்-உன்
பாததரிசனம் பெறவேண்டும் (இந்த)

சரணங்கள்.

1. தினமும்உன்பதமலர் தொழவேண்டும் நான்
தேகபரவசமா யெழவேண்டும்
அனல்மெழுகாயுருகி யழவேண்டும் இனி
ஆனந்தக்கடலின்நான் விழவேண்டும் (இந்த)

2. தேகவிஷயாதிகள் கெடவேண்டும் ஞான
தீபத்தையென்னுள்ளத்தில் இடவேண்டும்
பாகஅறப்பயிரை நடவேண்டும் அந்தப்
பயிர்க்குன்அருட்புனலை விடவேண்டும் (இந்த)

3. மோசப்பசாசுதனை வெலவேண்டும் நல்ல
முத்திநெறியிலே செலவேண்டும்
நாகமெனும்புலனைக் கொலவேண்டும் வேத
நாயகனேயுன்னுமஞ் சொலவேண்டும் (இந்த)



16. இராகம்-பைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

இந்தப்பிழைகளெல்லாம் பொறுப்பாயே - பாச
பந்தக்களைகளை வேரறுப்பாயே. (இந்த)

அநுபல்லவி.

சொந்தப்பிள்ளைகளான தூயவர்க்குப்பிதாவே
அந்தப்பரமசுகம் அளிக்குங்கனதாதாவே. (இந்த)

சரணங்கள்.

ஆதியானபரஞ்சோதி உன்னைநான்வெறுத்தேன்
என்மனந்தனை
ஆகமாதிகள்சொல் யோகசாதனையில்நிறுத்தேன்
அனுதினமும்
வேதவேதியர்களோது நீதியையுமறுத்தேன்
சமர்த்தன்போலே
வீம்புபேசிப்பெரும்பாம்பு போலவிடம்பொறுத்தேன்
சதாகாலமும்
பூதலவாழ்வுதனைநாடினேன் மறு
மாதர்கள்சுகந்தனைத்தேடினேன் பஞ்ச
பாதகரோடுஉறவாடினேன் கன
காதகனென்றுபெயர் சூடினேன்
ஆதுலர்க்கமுதியாமலேதடுத்தேன்
சாதுஜனங்களைக்கண்டேதடிஎடுத்தேன். (இந்த)

நேயமானதந்தைதாயைச்சற்குருவைப்பழித்தேன்
ஜெபதபத்தை
நித்தியகர்மங்களைப்பத்திமார்க்கங்களொழித்தேன்
கைப்பொருளெல்லாம்
காயமோகசுகமாய்வாழ்விற்செலவழித்தேன்
உனைத்தொழாமல்
காட்டில்வாழ்மிருகக்கூட்டம்போலநாள்கழித்தேன்
அனுதினமும்
தூயனைக்குறைசொல்லித்தூற்றினேன் பெருந்
தீயனைத்தினந்தினம் போற்றினேன் நல்ல
ஞாயவழக்குகளை மாற்றினேன் பதி
னாயிரம்பொய்சொல்லத்தோற்றினேன்
வாயில்வந்தபடிவம்புகள் தொடுத்தேன்
கோயில்மணியமெனக்குடிகளைக்கெடுத்தேன். (இந்த)

பூவிலேபாவியென்றுபேரெடுத்தேன்
புரட்டுருட்டும்
பொய்யும்வஞ்சனையுஞ்செய்யுமார்க்கந்தனையடித்தேன்
உன்னுமந்தனை
நாவிலேஎணதுபாவிலேசொலாமல்விடுத்தேன்
ஞானியைப்போல
நாட்டில்மாயவேஷங்காட்டிஎன்னைநான்கெடுத்தேன்
அனுதினமும்

பாவமும்பழிகளுந் தாங்கினேன் பெருங்
கோவமுங்குரோதமும்ஓங்கினேன் புண்ணிய
ஜீவனஞ்செய்யாமல் தூங்கினேன் நல்ல
பாவனஞ்செய்யும்வழி நீங்கினேன்
ஆவலாகப்பலர்பொருள் அபகரித்தேன்
காவலாநெறியைக்கடந்துசஞ்சரித்தேன். (இந்த)

4. வாரங்கூலிகளிற்சோரஞ்செய்துநான்குறைத்தேன்
பிறரிடத்தில்
வாங்கியபொருள்களை ஈங்கிலையென்றுநான்மறைத்தேன்
பஞ்சத்திலேவியா
பாரஞ்செய்யப்பலசேரில்நெல்லைக்கட்டிநிறைத்தேன்
நல்லதண்ணீரைப்
பாழிலேசகலநாழிகையும் விழலுக்கிறைத்தேன்
முதவினொடு
நேரவட்டிதளைக்கூட்டினேன் வெகு
தூரம்அகவிலையைநீட்டினேன் வழக்
கோரஞ்சொல்லிச்சண்டைமூட்டினேன் உப
காரஞ்செய்தோர்க்குக்கத்திதீட்டினேன்
தாரம்பிள்ளைகளுக்குந் தான்செய்தேன்வஞ்சம்
நேரில்வேதநாயகாநின்னடிதஞ்சம். (இந்த)



## 17. இராகம்-சுருட்டி-திசிரஜாதி-ரூபகம்.

பல்லவி.

தேவாதிதேவனே-தயை-தயை-செய்தருள்வாயே.

அநுபல்லவி.

பாவஉடலம்எடுத்துநீளும்
பாதகனும்என்னைநாளும்
பந்தப்பகைசாடாமல்
சிந்தைத்துயர்கூடாமல்
நிந்தைப்பழிமூடாமல்
இந்தப்படிவாடாமல். (தேவாதி)

சரணங்கள்.

1. கற்பகோடிகாலம்போலஅற்பவாழ்வினை மதித்தேன்
காரமாகஎந்நேரமும் அகங்காரமும்நெஞ்சினிற் பதித்தேன்
தற்பராஉன்பொற்பாதாம்புயந்தாழ்ந்திடாதெனைத் துதித்தேன்
சாந்தமாம்யோகாந்தமார்க்கஞ்சார்ந்திடாமற் குதித்தேன்

நற்பதந்தனைநாளுஞ் சார்ந்து
நாசவினைகள்யாவுந் தீர்ந்து
ஞானந்தனிலே நீட
மோனந்தனையே நாட
வானந்தனையே தேட
ஆனந்தமுமே கூட (தேவாதி)

2. பாசமாய்பிசாசம்என்மனம்வாசஞ்செய்வது நிலையே
பாபமுங்கடுங்கோபமும்பலர்சாபமும்பெரு மலையே
நேசமும்விசுவாசமும்பிரகாசமும்எனக் கிலையே
நிந்தையானஅகந்தையும் என்சிந்தையுங்கடுஞ் சிலையே
ஈசனேஎன்பாபம் நீக்கி
என்னையேஉன்தார ணுக்கி
இன்பக்கடலே சேரத்
துன்பக்கடலே பேர
அன்பர்க்கினமே சார
என்பொய்க்குணமே தீர (தேவாதி)

3. அன்பர்களிக்கஇன்பம்அளிக்கும்ஆனந்தப்பெரும் நதியே
அனவரதமுங்கனவிரதர்கள்அகத்தில்ஒளிரு மதியே
துன்பசாகரம்என்பதுகெடத்தோன்றிடும்பர கதியே
தொண்டன்வேதநாயகன்மனம்பெண்டகமகிழ் பதியே
நின்பதந்தனைநாளும் ஏத்தி
நேசமாய்க்கவிமாலை சாத்தி
நீதிப்பயனே விள்ள
ஆதிப்பழியே தள்ள
வேதப்பயனே கொள்ள
போதத்தினிலே துள்ள (தேவாதி)

---

18. இராகம்-பியாகு-ரூபகதாளம்.

பல்லவி,

இந்தநிமிஷமேபாபநிவர்த்தி
எனக்கருள்வாய் ஸ்வாமி.

அநுபல்லவி.

எந்தநிமிஷத்தில்சாவுவருமோமென்
றேங்கியேநான் பயந்தேனே-உயர்
நீங்கிடிலென்னசெய்வேனே-சுரர்கோனே. (இந்த)

சரணங்கள்.

1. காலையோமாலையோநாளையோசாவெனுங்
காலங்கணக்கறியேனே வந்த
வேலைமுடியுமுன் ஓலையனுப்பிட
வேண்டாஞ்சொன்னேன்சிறியேனே என்னை
ஆண்டாலுனைப்பிரியேனே பெரியோனே (இந்த)

2. பொட்டென்றுதேகந்தான்சட்டென்றுவீழ்ந்திடில்
கிட்டஒருவர்நில்லாரே குழி
வெட்டென்பர்பிரேதத்தைக்கண்டென்பர்மண்ணைமேற்
கொட்டென்பர்போவர்பொல்லாரே ஆன்ம
நட்டம்வராமற்கண்பாரே தூமர் (இந்த)

3. கப்பம்இல்லாமலேஎப்படியேனுங்
கடலைக்கடக்கவொண்ணுதே நாளும்
அப்படிநின்பதத்தெப்பமில்லார்க்கந்த
ஆநந்தவீடுநண்ணுதே நல்ல
ஞானந்தருவாயிப்போதே கைவிடாதே (இந்த)

4. ஆதிமத்தியாந்தரகிப்பிரபோத
அபேதபுராதனநாதா நாளும்
காதலுடன்வேதநாயகனுள்ளக்
கமலந்தங்குந்திருப்பாதா எனக்
கமலந்தரஇன்னம்வாதா கிடையாதா



19. இராகம்-கல்யாணி-அடதாளசாப்பு.

பல்லவி.

இந்தஉபகார மறவேனே-பூமி
அந்தரம்எங்கும்நிறை-கோனே.

அநுபல்லவி.

விந்தைநரஜன்மம்நான் மேவஅருள்நோக்கினுய்
தந்தைதாய்மனேசேயர்தந்துகுறைநீக்கினுய் (இந்த)

சரணங்கள்.

1. குருதியாகியசேறு கூட்டி நல்ல
கொழுமாமிசச்சுவரை நாட்டி
வரிஎன்புவிட்டங்கள் பூட்டி தட்டும்
வடமாநரம்புகளை மாட்டி

இருகாலில்நவவாசல் உடல்மனையை வீக்கினாய்
இன்பங்கள் நுகர அந்திரியம் ஆக்கினாய்
அரியஆன்மா அங்குகுடியுறப் போக்கினாய்
அந்தஆன்மாவில்நல்லறிவினைத் தேக்கினாய் (இந்த)

2. பூமியாகியவீ டமைத்தாய் பஞ்ச
பூதாதிஉளழியர் சமைத்தாய்
மாமதுரஉணவுகள் கொடுத்தாய் அந்த
வானமாம்பந்தலும் எடுத்தாய்

சோமசூரியதாரகாதிபம் ஏற்றினாய்
சுகவாயுவாலஉஷ்பணசோகத்தை மாற்றினாய்
சேமஉணவாக்கவேதேயுவினை ஆற்றினாய்
சீதக்கடங்கொண்டுதெண்ணீரை ஊற்றினாய் (இந்த)

3. கடலாறுகுளம்ஓடை தந்தாய் மலர்க்
காவுகளுமஉதவினு யெர்தாய்
தடமலைதருக்களும் வகுத்தாய் வனம்
சார்மிருகபக்ஷிகள் பகுத்தாய்

திடமானநவமணிஉலோகாதி நீட்டினாய்
ஜெகஜோதியாகவேசிங்காரம் நாட்டினாய்
அடமின்றிநாஞவினோதங்கள் காட்டினாய்
ஐம்புலாதிகளுக்கும்இன்பங்கள் ஊட்டினாய் (இந்த)

4 சிற்சிலபறவைகானஇசை பாடும் வேறு
சிலபறவைதிருநடனம் ஆடும்
பலமிருகம்நரர்வேலை புரியும் நல்ல
பசுவாதிபாலினைச் சொரியும்

மலர்கனிகள்காய்நிழலைமரமெலாம் நீட்டுமே
மண்ணன்னம்விளைவித்துவயிறார ஊட்டுமே
கலதரமுமெங்களைத்தலைமுழுக் காட்டுமே
சர்வபொருள்களும்நல்லசந்தோஷம் மூட்டுமே. (இந்த)

5. பித்தர்க்குநீசெய் பாரகமே வளம்
பெரிதெனினுமீ தற்பசுகமே
சுத்தர்க்குநீசெய் பேரகமே பரம
சுகமெனவிரும்புமென் அகமே

பத்தர்அநுகூலநற்பரமகா ருண்ணியனே
பகிரண்டகோடிகள்பரித்திடுந் திண்ணியனே
வித்தகசொரூபமேமேவுநற் புண்ணியனே
வேதநாயகன்உள்ளமீதுவளர் கண்ணியனே. (இந்த)

20-இராகம்-கேதாரகௌளம்-ஆதிதாளம்.

பல்லவி.

சிந்தைக்குள் உறைந்தும்நீ சிந்தைத்துயரந்தனைத்
தெரியாயோ ஸ்வாமி.

அநுபல்லவி.

அந்தரம்புவியெங்கும் அரசாக்ஷி யளிப்போனே
எந்தப்பொருளின்உள்ளும் இருந்தகங்களிப்போனே (சிந்தை)

சரணங்கள்.

1. பாலையும்விஷம்ஆக்கும் பாம்புபோல்கொடுமனம்
பலசுகத்தையுந் துன்பம் ஆக்குமே
பூலோகமெல்லாம்வசமாயினும்வேறொரு
புவனத்தையும்பிடிக்க நோக்குமே

காலமுழுதும்இந்தக் கருத்தே யாதனுரூபம்
கலியாணவீட்டிலும்கட்டிக்கொண் டழும்சோபம்
மேலவனேஎனக் கிதுவாய்த்த தென்னபாவம்
வேதநாயகனேபா ராயோஎன் பரிதாபம் (சிந்தை)

2. இருதலைக்கொள்ளிநடுவிருக்கும் எறும்புபோல
எந்நாளுந்தொலையா விசாரமே
ஒருசாணுகிய உதரக்குழிஅடைக்க
உலகில்படுங்கஷ்டம் அபாரமே

தரணியின்வாழ்வென்பதுதானே விஷவிருக்ஷம்
சார்வதாஇதில்வரும் சங்கடம் கோடிலக்ஷம்
தருமயோகாந்தநிலை சார்தல் உத்தமபக்ஷம்
சார்வாநுகூலாஉனக் கெல்லாம் பிரத்தியக்ஷம்

3. போர்க்களநடுவிலே குடியிருப்பதுபோலப்
புலச்சத்துருக்களின்போ ராட்டமே
சேர்க்குந்தசைவடிவாந் தேகமிதுபிணியுந்
தீவினைகளும்வளர் தோட்டமே

பார்க்கின் இதுவே ஆசா பாச நடனசாலே
பகலும் இரவும இது படியுமே மோகவேலை
தீர்க்கவைத்தியர்க்குத்தினமுங் கொடுக்கும்வேலை
தினம்வேதநாயகா சேர்ந்தேன் உன்திருக்காலே. (சிந்தை)

---

21-இராகம் யமுனகல்யாணி- ரூபகதாளம்.

பல்லவி.

சரணம்சரணம் நாதா-உன்
சரணம்தர ஒண்ணாதா

அநுபல்லவி.

திரணமாகிய காயமே இதில்
தினம்அனந்தம் அபாயமே
மரணம்வருமுன் னேயமே பெற
மகிழ்ந்தருள் சகாயமே கோடி (சரணம்)

சரணங்கள்.

1. பாவியேன் இரு தயமே பவ
பாதகங்களின் மயமே
மேவிடுந் துர்வி ஷயமே வினை
விலக்கி அருள்நன் னயமே

மாயவினைகளை மாற்றுவாய் எதிர்
வந்தென்சிந்தையில் தோற்றுவாய்
சேவைதந்தெனைத் தோற்றுவாய் இந்தத்
தீயனைக்கரை யேற்றுவாய் (சரணம்)

2. மதம்இராகது வேஷம் பொய்
வஞ்சகம்பவ தோஷம்
எதிலும்நான் விசேஷம் எனக்
கில்லைபுண்ணிய விசேஷம்

மதனப்பேயை ஓட்டுவாய் நல்ல
மார்க்கத்திலெனைக் கூட்டுவாய்
விதனநரகைப் பூட்டுவாய் உன்
வீட்டுக்குவழி காட்டுவாய் (சரணம்)

3. தாசர்கள் பரிபாலா கன
சாத்விக குணசீலா
நீதர்கள் பிரதிகூலா சத்ய
நீதியுறு செங்கோலா

ஆசறுமுதல் நூலனே அகி
லாண்டகோடிவி சாலனே
நாசரகித மூலனே வேத
நாயகன்அநு கூலனே (சரணம்)



22-இராகம்-கற்கடா-ஆதிதாளம்.

பல்லவி.

சீலம்நீதா தேவநாதா
சிறியன்மீது வாதா-அபேதா

அநுபல்லவி.

மூலகாரண தயாபர வேதா
மோக்ஷசாம்பிராச் சியப்பிரதாபா (சீலம்)

சரணங்கள்.

1. நன்மைதுன்மைஇன்ன தென்பதுதெரியேன்
ஞானமார்க்கந்தனையே அநுசரியேன்
சின்மயாநந்தனே ஜெபம்புரியேன்
தீயனானநான் பாபத்திற்பெரியோன் (சீலம்)

2. தாயிருக்கப்பிள்ளை தயங்குதல்சரியோ
சாமிநீஎன்மனம் வாழ்வும்வரியோ
நீயிருக்கஎன்தன் துன்பம்உபரியோ
நீயேதாமசிக்க என்னுடல்கிரியோ (சீலம்)

3. ஜீவசிருஷ்டிஸ்திதி லயஅதிகாரா
ஜென்மசாபல்லியப்பிர தானஉதாரா
தேவதேவகன பூசிததீரா
சிறியன்வேதநா யகன்உபகாரா. (சீலம்)

23. இராகம்-உசேனி-ஆதிதாளம்.

பல்லவி.

நின்பதமேதுணைஐயா-மனத்
துன்பம்அகலஅருள் செய்வாய்

அநுபல்லவி.

இன்பமகோததியே இனிதயாநிதியே
அன்பர்பரகதியே அமரர்க்கதிபதியே (நின்)

சரணங்கள்.

1. என்மனம்இளகாத பொருப்பே மாயை
என்றைக்கும்அதிற்குடி யிருப்பே
தன்மமேஅதற்கரு வருப்பே கெட்ட
தாமசகுணமென்றால் விருப்பே
நன்மைகெடுக்கும்இச்சை நாசக்கொடு நெருப்பே
துன்மையெல்லாம்அகலத்திருவருட்கண் திருப்பே. (நின்)

2. ஏதுஅறியேன்ஞான சாஸ்திரம் புவ
னேசாஉனக்குநான் எம் மாத்திரம்
சோதனைக்கெளியேன் அபாத்திரம் அதி
தூயனேஎன்இன்னம் க்ஷாத்திரம்
வேதனைமிகக்கொண்டு மெலிவுற்றேன் அகோராத்திரம்
சாதகமுறவேநீ தருவாய்மெய்ஞ்ஞான நேத்திரம். (நின்)

3. நீசனுன்வினைக்கெல்லா மூலம் எந்தன்
நெஞ்சஞ்செய்வதும் பிரதிகூலம்
பாசபந்தஉலக ஜாலம் தன்னில்
படிந்துநொந்தேன் பலகாலம்
ஈசனேகேளாயோ ஏழைநானிடும் ஓலம்
தாசன்வேதநாயகன் தனக்குநீயருள் சீலம். (நின்)



24. இராகம்-முகாரி-ஆதிதாளம்.

பல்லவி.

ஆள்வாயெனதுள மூள்வாயெனக்குன்றன்
அடியிணையே துணையே,

அநுபல்லவி.

நீள்சுகக்கனியனே நேசருக்கினியனே
நாள்வளர்தனியனே நயமறைத்தொனியனே. (ஆள்)

சரணங்கள்.

1. பேதைநான் பயனில்லாம் பேச்சிற்சண்டப்பிர சண்டம்
பிறணாமயக்குவதிற் பெரியஉற்பாத பிண்டம்
வேதவினைஎனக்கு விளைசருக்காைக் கண்டம்
விறைந்தருள்புரிஉனக் காயிங்கோடி தண்டம்
வேதனே வரபிர-சாதனே-ஆசீர்
வாதனே-சுரர்புகழ்கொள்-காதனே-நாதனே எனே. (ஆள்)

2. மனமெனுங்குரங்குக்குக் கனஅறமே உபேகைக்ஷ
வாதனைநீக்கிடாமல் ஏதின்னமும் பரீகைக்ஷ
தினகரரூபனே திவ்யமெய்ஞ்ஞான தீகைக்ஷ
திடமுடன்கொடுத்தருள் அதுவேஎன தபேகைக்ஷ
தேவனே-மனோ-பாவனே-மறைசொல்
நாவனே-தயைநிறை-சுபாவனே ஜீவனே எனே. (ஆள்)

3. நிகரில்கனதெய்வீக நின்மல சுலக்ஷணு
நித்தியம்நினையும்பக்தர் நெஞ்சப் பிரதக்ஷணு
சகலஜீவாத்மகோடி தாங்கும் சம்ரக்ஷணு
சாஸ்திரம்புகலும்சுரர் ஸ்தோத்திரா மிர்தபக்ஷணு
தாங்குவாய்-நெஞ்சில்-ஓங்குவாய்-துயரம்
நீங்கவே-வேதநாயகன்-பாங்காய்-நின்றனுதினம். (ஆள்)

---

25. இராகம்-ஆரபி-ஆதிதாளம்.

பல்லவி

தேவநாயகனே என்மீதிலுன்
திருவுளம் இரங்குவையே,

அநுபல்லவி.

ஜீவன்முக்தியூர்ஜித சீலர்பிதுரார்ஜித
தாவில்அதிபூஜித சர்வசமயயோசித. (தேவ)

சரணங்கள்.

1. காதலாமலகம்போல் உனக்குயாவும் திர்ஷ்டாந்தம்
கர்த்தனே அறியாயோ நீஎளது விர்த்தாந்தம்
பரவும்பதங்களென்றால் பாலகர்க்கும் ஆனந்தம்
பலபதங்கேட்டுந்தயை பண்ணுயே தோசித்தாந்தாம்
பற்பல-நற்பல-உற்பவ-விற்பன
கற்பனே-செப்பரும்-அற்புத-உற்பன. (தேவ)

2. தனமிகவேண்டுவோர்க்குச் சல்லியோடு தனமோ
தாகமுள்ளோர்க்குக் கானல்ஜலமது பானமோ
கனசுகந்தேடெனக்குக் கவலைசன் மானமோ
கதியருள்வாயுனக் கதுபாய தீனமோ
கர்த்த-சமர்த்த-பிரசித்த-சம்வர்த்தன
பக்தர்கள்-சுத்த-அகத்துறு-நிர்த்தன. (தேவா)

3. தினமும்அனந்தபாவஞ் செய்வதென் சாம்பிரதாயம்
சிந்தைக்கறங்கசப்புசேர் வேப்பிலைக் கஷாயம்
இனவேதநாயகனென்றேற்றேன் உன் னுமதேயம்
எனக்கல்லாவிடினும் அப்பெயர்க்கேனுஞ் செய்சகாயம்
எம்பர-உம்பரும்-அன்பரும்-நம்பிய
அம்பர-சம்பிரம இன்பம்-நிரம்பிய (தேவா)

---

26. இராகம்-அடாணா-ஆதிதாளம்.

பல்லவி.

ஈசாநின்பொற்பாத மலர்நம்பினேன் என்னை
இக்ஷணமேவந்து ரக்ஷணஞ்செய்தருள்.

அநுபல்லவி.

தாசர்மனகமல லாசனகேசர
சாசுவதயோக சாம்பிராஜ்யகிரகேசர
ஆசைக்கினிய அவாங்மனோகேசர
அண்டபிரமாண்ட அகண்டசராசர, (ஈசா)

சரணங்கள்.

1. எத்தனையோபேர் சுகித்தமர்வீட்டில்
எனக்கிடம்பூச்சியமா தயை
சித்தங்கொள்வாயெனப் பித்தனெனக்குத்
தினமனோராச்சியமா நல்ல

நித்தனேஇன்ப மிகுத்தமுத்தி நலன்
நீதரில்வானவ ரோதுவரோ கலன்
சத்தில்வழக்கவர் பேசிஎன்ன பலன்
தாயேஉற்றதுணை நீயேபின்வேறி லேன். (ஈசா)

2. மாகுணபாகசை யோகமின்றிப்புவி
வாழ்ந்தவர்தாமெவரோ எங்கும்
ஏகும்நெஞ்சுன்னரு காகவராதிதற்
கேகுறுக்குச்சுவரோ விஷ

நாகமாயைக்கெங்குஞ் சர்வ கொள்ளையோ
நான்பயனில்லாமற் பேசிடுங் கிள்ளையோ
ஆகிலுமென்புத்தி தான்சுத்த வெள்ளையோ
ஐயனேநானென்ன தாயிலாப் பிள்ளையோ, (ஈசா)

3. வந்துன்தரிசனந் தந்தருளிலென்
மனக்குறைதீறேனே உள்தன்
சுந்தரபாதமென் சிந்தனையூன்றிற்
சுகக்கடல்சாறேனே பெரும்

பந்தநெருப்புக்கென் சிந்தனை செத்தையா
பாவியென்றென்னைக்கை நீவிடில சத்தையா
விந்தைநலந்தந்திடல் பெரு வித்தையா
வேதநாயகன்பங் கென்ன சொத்தையா. (ஈசா)

—(-)—

## 27. இராகம்-துசாவந்தி-ஆதிதாளம்,

பல்லவி,

ஆதியே பரஞ்சோதியே எனை
ஆதரித்தருள்வாயே,

அநுபல்லவி.

ஓதிஉணரலுண்ணு தோங்குங்குணகர
நீதிவடிவமுறு நின்மலசாகர. (ஆதியே)

சரணங்கள்,

1. உலககாரியத்தில் நான்வெகுதிராணி உன்னை
உன்னுவதிற்கேவலம் அப்பிராணி
நலம்என்பதெனக் குண்டோமாகாணி என்தன்
நவைஏற்றப்போதுமே ஆயிரந்தோணி
மலவசமாகிச் சோர்ந்தேன்
தலைவாஉன்னடி சார்ந்தேன்
பதிக்கும்அடியர்கள் துதிக்கும்ஆரிய
குதிக்கநானென உதிக்கும்வீரிய. (ஆதியே)

2. கண்ணுள்ளபோதல்லவோ கண்காட்சி சீவன்
கழியுமுன்னல்லவோ புண்ணியமாட்சி
மண்ணில்எனக்கு ஞானஅரசாட்சி மிக
வாய்க்கும்படிஐயனே நீகடாட்சி
எண்ணரிய பிரதாபா
நண்ணரும் சுப்பிரதீபா
இணங்கும்அமரர்கள் வணங்குபெருவர
மணங்குலாவு சுகுணங்கொள்குருபர. (ஆதி)

3. தீதுபொறுத்தல் தெய்வகுலதர்மமே
செய்கைகளே மனுஷகுலதர்மமே
ஓதிவிட்டேன் உனக்கென் உள்மர்மமே-என்மேல்
ஓகோஐயனே இன்னம்ஏன்வர்மமே
பாதகமலம்அணி வேதநாயகன்பணி
படர்ந்திருவருள் அடர்ந்திடும்பிரம
கடந்தஞானியர் தொடர்ந்தசம்பிரம (ஆதியே)

---

28. இராகம்-கேதாரம்-ஏகதாளம்.

பல்லவி.

தேவனே உனைநம்பினேன்
அடியேனை ஆண்டருள்.

அநுபல்லவி.

தேவா-துரித-அபாவ-சுகுண-சுபாவா
மகாநு-பாவா-வாவா (தேவனே)

சரணங்கள்.

1. ஐயாநிலைஅறு பொய்யாம்உலகினில்
நையாவகைஅருள் செய்யாயோஉயர். (தேவனே)

2. வாராயோமுகம் பாராயோஅருள்
கூராயோவினை தீராயோகன. (தேவனே)

3. பெரியாய்கைவிடல் சரியாநான்வினை
புரியாவிதம்அருள் சொரியாயோஉயர். (தேவனே)

4. நொந்தேன்வினைசுடவெந்தேன்உனதிடம்
வந்தேன்சுகநிலை தந்தேஅருள்புரி. (தேவனே)

5. நாதாஅருள்ஒண் ணுதாமனம்இரங்
காதாஅனுதினம் வேதநாயகன்பணி. (தேவனே)



## 29. இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

பரனே-அடியர்மனோ-கரனே-நிமலதின
கரனே-நீஅருள்-வரனே

அநுபல்லவி.

உரனேமிகும்புவன தரனேஅகண்டசர
சரனேபரமசுககரனே தீரனேஅரும். (பரனே)

சரணங்கள்.

1. என்னைவந்திரக்கும்ஏழை தன்னைநாள்தள்ளிவிடில்
ஈசனேகோபம்பண்ணுயோ தங்கை
அன்னையேஉனையிரக்கும் என்னைநீதள்ளில்எனக்கும்
அவ்விதமென்றே எண்ணுயோ
முன்னைநீஅனேகரை உன்பொன்னடியிற்சேர்த்தனை
இன்னமும்பலபேர்தமைப் பின்னும்வினைதீர்த்தனை
என்னவேநான்கேட்டுன்மீது சொன்னேன்பலகீர்த்தனை
பின்னையொன்றும்வேண்டேன்அருள் உன்னையிதென்பிரார்த்த
[னை. (பரனே)

2. உத்தமனேநான்பெரிய பித்தனுயினும்உனை
அடுத்தவனெனஉன்னுயோ பாரில்
சித்தமிசைபைத்திய மிகுத்தபாலகனைக்கை
விடுத்தகலுவதாளாயோ
முத்தொழிலில்முதல்தொழிலில் கொண்டுசெய்தாயென்சடம்
முத்தஞானம்அளித் தெனைக்காத்தருளாயேன்ஹடம்
அத்தனேஅவ்விரண்டாந் தொழிலில்என்சங்கடம்
அதுதரில்மூன்றாந் தொழிற்கஞ்சிடேன்இதுதிடம். (பரனே)

2. பாடுகவியிற்கற்பனை தேடுவதல்லால் உன்னருள்
கூடும்வகைகுறியேனே-என்னை
நாடும்எவரோடுமே வாதாடுவதல்லால் என்வாயை
மூடும்வகை அறியேனே
வாடுதலிற்பாதமலர் சூடுபெரியோரக
வாசபுவனேச வுரபாசவினைமாரக்
கீடுதவுதியாக அலையாடுகெடற்பாரக
மீதுவேதநாயகன் எப்போதுமேகொள்தாரக. (பரனே)

30. இராகம்-பியாகடை-திரிபுடைதாளம்.

பல்லவி.

அம்புயப்பதம்நம்பினேன்ஐயா-பரலோகசாதக
சாமபிரமத்தைவிரும்பினேன் மெய்யா
கனதியாகக்கையா.

அநுபல்லவி.

தம்பமாம்அவலம்பம்வேறிலையே தேவாதி தேவர்கள்
சகிதமாகியசுகிதமாமலையே மெய்ப்போதநிலையே. (அம்புய)

சரணங்கள்.

1. தினமும்அலையுமென் மனமேகீசகமா-அடியேனுன்பால்இஷ்ட
சித்திவேண்டியே நித்தியம்யாசகமா
கனஅநீதனென்மீதரோசகமா-என்சொல்உன்காதுக்குக்
கடினமாகிய கொடியவாசகமா
நானொருசகமா. (அம்புய)

2. மண்ணின்வாழ்க்கையில் எண்ணியாதனையேஅதுநீங்கவேயருள்
மன்னிடாமலேன் இன்னஞ்சோதனையே
திண்ணியம்பெறு புண்ணியசாதனையே-அடியேனுக்கேஸ்வா
தீனமாகச்செய்ஞானபோதனையே
செய்தேன்வந்தனையே (அம்புய)

3. எண்ணிமகிழ்ந்திடு புண்ணியவிக்கிரமே பரிசுத்தசீலர்கள்
இஷ்டபூரண துஷ்டநிக்கிரகமே
விண்ணினோர்தினம் நண்ணுசுகக்கிரகமே-இனிநீபுரிந்தருள்
வேதநாயகன் தனக்கனுகிரகமே
பணியார்உக்கிரகமே. (அம்புய)

31. இராகம்-ஆகிரி-திரிபுடைதாளம்.

பல்லவி.

சம்மதியெனக்குமெய்யனே உனைநினைக்க
நன்மதிதந்திடில் ஐயனே

அநுபல்லவி,

அம்மவென்றழ மேன்மேலும்
வெம்மனநோயே சூழ்ந்தாலும். (சம்மதி)

சரணங்கள்.

1. தன்னைஉன்னவே கூடாதென்றே தடைசெய்வோன்தான்
இந்நிலத்துண்டோ குணக்குன்றே
நின்னையே தொழவிரதம்
நேர்ந்துனை அனவரதம்
உன்னவே என்மனோரதம்
உதவுவாய் கருணாமிர்தம்
ஓங்கிவளர்தனம் நீங்கியொழியினும்
வீங்கியுடல்பிணி தாங்கியழியினும் (சம்மதி)

2. பாதமலர்மேல்ஆசைகொண்டேனே உலகவாழ்வு
சதமலவென்றுண்மைகண்டேனே
நீதமுனைப்பணியுமதி
நீதரஇலையோவிதி
அதிற்குறையுமோஉன்நிதி
அண்டினேனானுன்சந்நிதி
அடரும்வறுமையோடிடர்கள்சூழினும்
படருமனந்துயர்க் கடலில்ஆழினும். (சம்மதி)

3. உத்தமபிரமசைதன்னியமே சௌஜன்னியமேமெய்ப்
பத்தர்கள்அல்லா தார்க்கன்னியமே
சுத்தமதுரபாஷணா
சோபனகுணபூஷணா
வித்தகசுவிசேஷணா
வேதநாயகன்போஷணா
விலகியேஎனை உலகம்நகைக்கினும்
கலகமாகவேபாலர்கள் பகைக்கினும். (சம்மதி)

## 32. இராகம்-கேதாரம்-ஆதிதாளம்.

பல்லவி.

ஐயனே-உயர்-மெய்யனே.

அநுபல்லவி.

உய்யவே அருள்புரி செய்யபதந்தந்தெனை (ஐயனே)

சரணங்கள்.

1. ஈசனேநான்ஆத்ம இரக்ஷண்ணியமே. பெற
இரங்கியருள்கடாக்ஷ வீக்ஷண்ணியமே
தாசன்நானுனக்கென்னுந் தாக்ஷண்ணியமே கொண்டு
தந்தருள்வாய்விவேக தீக்ஷண்யமே. (ஐயனே)

2. இகனிஅழிந்து போம்நில்லாது அதை
ஈந்தனம்போது மென்றால்செல்லாது
நிகழ்நித்தியசுகந் தந்தால்அல்லாது சற்றும்
நில்லாமல்நச்சும் என்வாய்பொல்லாது (ஐயனே)

3. கோதையர்மைந்தர் முதற்பரிஜனமே சந்தைக்
கூட்டம்அவர்மேற் கொள்ளுந்தரிசனமே
வேதைதரும்இது நிதரிசனமே அருள்
வேதநாயகனுக்குன் தெரிசனமே. (ஐயனே)



## 33. இராகம்-ஜயந்தஸ்ரீ-ஏகதாளம்.

பல்லவி.

நாதாநிரந்தர-விநோதா-உன்தன்
பாதாரவிந்தம்-எனக்-காதாரம்-தாதா.

அநுபல்லவி.

வேதாந்தசார நயபோதா பஞ்ச
பூதாந்தகால விபரீதா பிரக்கியாதா ஜெக (நாதா)

சரணங்கள்.

1. பேசருஞ்சர்வ புவநேசா நல்ல
தாசர்மனாலயவாசா பவநாசா ஜெக (நாதா)

2. மாவரந்தரலாகாதா வினை
போவெனநீசொலிற் போகாதா சாகாதா புவி (நாதா)

3. மாயையின்பசப்தமேஙிசமா அந்தப்
பேயைக்கொல்வ துனக்கவசமா தாமசமா தெய்வ ()

4. அடியன்மனங் கடினஇரும்பா அருங்
கொடியவினை அதற்குக்கரும்பா நாஞேர்துரும்பா
[ஜெக (நாதா)

5. ஆதிமத்ய அந்தரகிதா கயஞ்
சோதிமய அமரர்சகிதா கனசுகிர்தா மகி ()

6. மயாந்தகாரம் அகில்கிரணு வேத
நாயகன்தொழுமலர்ச்சரணு அந்தக்கரணு தெய்வ (நாதா)

---

## 34. இராகம்-புன்னுகவராளி-ஆதிதாளம்.

### பல்லவி.

காக்கவேண்டும-கடவுளே-நீகாக்கவேண்டும்

### அநுபல்லவி.

காக்கவேண்டும் எனை அன்பன் ஆக்கவேண்டும் என்கவலே
நீக்கவேண்டும் பாவமெலாம் போக்கவேண்டும் தினமெனைக்

### சரணங்கள்.

1. பண்ணியவினையுமனம் எண்ணியவினையும்வாக்கில்
நண்ணியவினையுந் தீரக் கண்ணியவரந்தந்தெனைக் (காக்)

2. ஆரணனேநீகொடுத்த தாரணிச்செல்வத்தின்மனம்
பூரணமானேன்பவநி வாரணசுகந்தந்தெனைக் (காக்க)

3. எந்தவேளைமரணமோ அந்தவேளைவந்துன்அர
விந்தமலரோஙிகருஞ் சுந்தரஅடிதந்தெனைக் (காக்க)

4. பூதமுதலானஜீவ பேதகாரணனேநாளும்
வேதநாயகன்பணிபிரக் கியாதபூரணனேஎனைக் (காக்க)

## 35. இராகம்-கேதாரகௌளம்-திரிபுடைதாளம்.

பல்லவி.

ஈசனேமல நாசனேமல வாசனேபிர காசனே.

அநுபல்லவி.

பாசஇருளினை நீக்குவாய் உன்தன்
பதத்துக்கெனைஉற வாக்குவாய். (ஈசனே)

சரணங்கள்.

1. சிறியன்மதிவெறும் ஸ்தூலமே அதன்
செயலெலாம்அலங் கோலமே
குறிகொள்பாச நிர் மூலமே செய்து
குணந்திடஇது காலமே
அறியநானிடும் ஓலமே செவிப்
பொறிகொண்டுத வனு கூலமே. (ஈசனே)

2. அடருங்காமங்கொள் பேழையேநிகர்
ஆகும்உடலெனும் பாழையே
திடமென்றுன்னும்நான் ஏழையே குறை
தீரக்கற்றறி மோழையே
தொடுசிலேட்டுமங் கோழையே உயர்ந்
திடுமுன்தொலைப்பவப் பீழையே. (ஈசனே)

3. என்னைக்கெடுத்திடக் கச்சையே இடை
இறுக்கிக்கட்டிக்கொண் டிச்சையே
முன்னைவருத்திடக் கொச்சையே கொண்டுன்
முன்வந்திரந்தனன் பிச்சையே
உன்னுமாவரத தியாக மமைபொழி
பன்னும்வேதநா யகன்வெவ் வினையொழி. (ஈசனே)

---

## 36. இராகம்-ஆனந்தபைரவி-ரூபகதாளம்.

பல்லவி.

நிரந்தரனே மா துரந்தரனே கன
நிர்மலத்துவ தர்மகர்த்தத்துவ.

அநுபல்லவி.

பரந்தபேரருள் சுரந்துகாத்தருள்
வரந்தந்தென்வினை விரைந்துதீர்த்தருள். (நிரந்தரனே)

சரணங்கள்.

1. சித்தமிரங்கிஎன் எத்தனே நீதயை
செய்யிற்பிழையேனே-கன
நித்தனேஎன்பிழை எத்தனேஎன்னினும்
நீங்கித்தழையேனே-நல்ல
உத்தமம்என்னிடம் சுத்தசரித்திரம்
ஒன்ருேபலவிதம் என்துர்ச்சரித்திரம்
நித்தம்என்னெஞ்சம் உடுத்தமால்வஸ்திரம்
நீக்கிஎனேச்சேர் சௌபாக்கியசமுத்திரம் (நிரந்தரனே)

2. உதிமதிகதிர் முதலெல்லாஞ்செல்லும்
உன்ஆணேவழியே-என்தன்
கதியொன்றேஅந்த விதியைக்கடந்து
வளர்க்குமாபழியே-இந்தப்
பொதிமதிக்கேன் தனியரசாக்ஷியே
புனிதஞ்செய்குவ துன்பெயர்மாக்ஷியே
பதிதனெனென்பதற் கென்செய்கைசாக்ஷியே
பாவன்னீயென ஈவால்அத்தாக்ஷியே. (நிரந்தரனே)

3. பாரிருள்நீக்காத சூரியனாலேஅப்
பாருக்கென்னசாரம்-ஞான
ஆரியனேஉன்முன் சாரலாமோஎன்
அகத்தில்அந்தகாரம்-நாளும்
சாரமில்லாச் சமுசாரகோலாகலம்
சாருமெனக்கென்றுந் தீராவியாகூலம்
வீரனேநீயறிவா யென்பலாபலம்
வேதநாயகனே நீதருவாய்நலம். (நிரந்தரனே)

---

37. இராகம்-ஆனந்தபைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

அப்போதுனேத்தொழல அரிஜுதயா-உனே
இப்போதேதொழ அருள்செய்யாய்

அநுபல்லவி.

முப்போதும்உணரு முதலேசுரர்தொழும்
அப்பாமரணம் றடியேன்உடல்விழும் (அப்போ)

சரணங்கள்.

1. திடமாய்கற்பாறைபோலே திரண்டுகோழைகள்கட்டும்
சிறிதும்பேசாதவண்ணஞ் சேர்ந்திறுகிப்பல்கிட்டும்
படர்ஜீவவாயுவெளிப் படஎங்கும்ஓடுமுட்டும்
பாரிதுவேளேயெனப் படுமாயைதொடைதடடும்
பலங்கொள்உணர்வது கலங்கிநிலைகெட
இலங்குடலைஉயிர் விலங்கிமெலிவுறும். (அப்போ)

2. மனைவிசேய்கடன்காரர் மண்டிவார்த்தைவிரிபபார்
வகையெமக்கென்னவென்று மணல்கயிறுத்திரிப்பார்
மனையிற்பொருளேயெல்லா மாவலைபோட்டரிப்பார்
வகையென்றுமின்றேற்கையால் மணித்தொண்டையைநெரிப்பார்
மடங்குகழல்கர முடங்குசெயலொடு
திடங்கொள்கானமும் அடங்கிமாளுறும் (அப்போ)

3. அழுகைக்குரலும்பல முழக்கமும்நாளுபேதம்
ஆகப்பலபக்கத்தும் அடக்குமேகடனுதம்
விழுகையுறும்உடலின் வேதனையும்பிரமாதம்
வேதநாயகனேஅப் போதுனேஉன்னவேதம்
விரிக்கும்இடர்பல தரிக்கும்உடலினே
முரிக்கும்இசிவொடு மரிக்கும்வேளையில். (அப்போ)

---

38. இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

எவ்வகையிலும் நானே-நல்வழிபற்றி
உய்வகை அருள் கோனே.

அநுபல்லவி.

செல்வழிநிற்போர்மனத் தேன்கள்வளரும்பூவே
பௌவமாகப்பேரின்பம் பழுக்குங்கற்பகக்காவே. (எவ்வ)

சரணங்கள்.

1. வறியாக்கிடவென்றுலென் குறியகைகளிற்சூலே
வாங்கநீட்டின்உலகும் வானமும்எந்தமூலே
பிறர்நோய்செய்யில்எனக்குப் பெருங்கோபாக்கினிச்சுவாலே
பேதைஎன்பிழைஎழு திடவேண்டுங்கோடியோலே. (எவ்)

2. நல்வழிநடக்கவென் றால்இருகாற்குந்தளை
நாளுந் துர்வழிநடப் பதில்லெனக்குண்டோகளை
புல்வினையேன்செவி பொய்கள் நுழையும்வளை
புண்ணியோபதேசமென்றால் புகஅதில்லதுளை. (எவ்)

3. உன்னைத்துதிக்கவென்றால் உலகில்என்வாக்குநோயே
ஊர்வம்புபேசஎனக் குடம்புமுழுதும்வாயே
மின்னைநிகர்பிரபஞ்ச வேதனைநீக்குவாயே
வேதநாயகனுக்குச் சாதகமானதாயே. (எவ்)

---

39. இராகம்-செஞ்சுருட்டி-ரூபகதாளம்.

பல்லவி.

கதியிதென்முகம் பாரையா
கதிநினையன்றி ஆரையா.

அநுபல்லவி.

மதியுள்ளோர்கள் சிகிக்கும்அமிர்த
வாரியேஅருள் மாரியே. (கதி)

சரணங்கள்.

1. உனக்கென்எண்ணம் அந்தரங்கமா
உதவிதான்செய்யிற் பங்கமா
எனக்கிங்ககஷ்ய அங்கமா
இன்னமென்ன ஆடங்கமா
தனக்குநிகரில்லாத-ஞானசாகரா-குணகரா. (கதி)

2. அதஞ்செய்யும்வினை கற்கண்டோ
அதைத்தொலைப்பதென் பலங்கொண்டோ
நிதம்நான்செய்வது வீண்தொண்டோ
நீயல்லாற்கதி வேறுண்டோ
பாதகமலங்கள் பரவும்பத்தர்கள்-பாக்கியமே-மனோக்கியமே. (கதி)

3. அனைக்கும்பிள்ளைமேற் குரோதமா
அருள்செய்வது பிரமாதமா
வினைக்குநான்முதற் பாதமா
விலக்கஇன்னம் விவாதமா
நினைக்கும்வேதநாயகன்பணி-நீதனே-பிரபோதனே. (கதி)

## 40. இராகம்-கமாஸ்-ரூபகதாளம்.

பல்லவி

ஜாலஞ்செய்வதேதோ ஐயா
சீலம்-ஈயொண்ணுதோ மெய்யா.

அநுபல்லவி.

ஞாலமெல்லாந் தாங்குங்கையா
நற்குணமில் லார்க்குவெய்யா. (ஜாலம்)

சரணங்கள்.

1. பெண்டுபிள்ளை யோ டினமே
பேய்ச்சுனை படர் வனமே
அண்டும் இவரால் தினமே
ஐயையோ நொந்தேன் மனமே. (ஜாலம்)

2. பாழுமனமே மற் கடம்
பண்ணும் அகட விகடம்
ஊழ்வினை தரும் சங்கடம்
ஒழித்துநீ யருள்வாய் திடம் (ஜாலம்)

3. நீதிவழுவாச் செக் கோலா
நித்திய சங்கீத லோலா
வேதியர் பரவுஞ் சீலா
வேதநாயகன் சேர் காலா (ஜாலம்)

---

## 41. இராகம்-சாமா-திரிபுடைதாளம்.

பல்லவி.

வேதநாயகனே-எவ்விதமும்-உன்
பாதமலர்-அருனே

அநுபல்லவி.

போதநாயகனே பொய்நீங்கிய
புனிதநாயகனே மெய்தாங்கிய. (வேத)

சரணங்கள்.

1. எண்ணுமனமேதுர்க் குணங்கொள் பாண்டம்
ஏதும்அறிகிலேன் ஞான காண்டம்
பண்ணும்பாவங்களே பிர மாண்டம்
பகரும் வார்த்தைகளே அபாண்டம் ()

2. மண்ணில்அறு தினம்பூத தேகம்
வளர்ப்பதெனக் ககலாஉத்தி யோகம்
புண்ணியஉடல் வளர்த்திடும் வைதீகம்
பூண்டிலேன் அருள்வாய் விவேகம் ()

3. விதவிஷதரு கிரகஸ்தாச் சிரமம்
விரும்புவோர்க்கிதில் விலகிடாச் சிரமம்
நிதங்கொண்டேன் இந்தவாழ்விலே பிரமம்
நீங்கவேதநாயகனே அருள் கிரமம் (வே)

---

42. இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

எனக்குக்கட்டியவீட்டை-எனக்குக்கொடாதிருப்ப
தென்னஞாயம்ஸ்வாமி.

அநுபல்லவி.

இனிக்கும்அவ்வீடு செய்ததெங்கள் நிமித்தமே
என்றுநீசெய்ய வில்லையோவாக்கு தத்தமே
உனக்குநான்பிள்ளை யென்பதுசுப்பிர சித்தமே
உவந்துகேளாயோ என்பிரலாப சத்தமே. (எனக்கு)

சரணங்கள்.

1. சித்தவிகாரமுறு நரர்க்குச்செய்யிவ்வுலகம்
சிறப்புள்ளதேனின்கோனே நல்ல
உத்தமர்க்கமைத்தநித்தி யானந்தமுத்தியின்பம்
உணர்வதெப்படி நானே
சத்தமணிபொன் அங்கேதுரும்புசுள் ஈட்டமே
தொல்லுகின்பமெல்லாந் துன்பம்போல் ஓட்டமே
அந்தமியாநித்திய சூரியர்அன்பர் கூட்டமே
அநுதினம்எனக்கந்த வீட்டினில் நாட்டமே. (எனக்கு)

2. முகமுகமாகஉனைத் தரிசிக்கும்பாக்கியத்தை
மொழியநினைக்க ஒண்ணுமோ இந்த
இகமிசைமனமொடு புலன்கட்கெட்டாதஅந்த
இன்பம்எப்போது நண்ணுமோ

அகமிசைஉன்னஉன்ன ஆனந்தம்பொங்குமே
ஆயிரங்கோடி சூரியர்ஒளிமங்குமே
நிகரறுகீத விநோதங்கள்எங்குமே
நிரதிசயானந்தம் நிரந்தரம்தங்குமே(என)

3. இகமனைகட்டிநரர் குடும்பப்பிரதிஷ்டைசெய்த
இணையறும் எந்தாயே நித்திய
சுகமனைதன்னில் பிரவேசிக்கவேநல்ல
சுதந்தரம் அருள்வாயே
அகிலலோகப்பிரபஞ்ச நாடகசூத்திரனே
அற்புதபரமநித்தி யானந்தக்ஷேத்திரனே
நிகரறுசௌந்தர நிர்மலகாத்திரனே
நிதம்வேதநாயகன்தொழுங் குணபாத்திரனே(என)

---

## 43. இராகம்-செஞ்சுருட்டி-ஆதிதாளம்.

### பல்லவி.

ஐயனே-உன் அழகைக்காண
ஆசைநான்-கொண்டேனே. (ஐயனே)

### அநுபல்லவி.

வையமீதுபல அழகையும்
வகைவகையா வகுத்துக்காட்டும். (ஐயனே)

### சரணங்கள்.

1. உதயசூரியன் சோமன்தாரகை
உன்முன்னே மின்மினியே
நிதிநவமணி யென்னும்குப்பைகள்
நிகருமோஉனை இனியே. (ஐயனே)

2. கனியுந்தேனும் பாலும்சீனியும்
கண்டும்கரும்பும் சிறுமை
இனியஉனது தரிசனத்தின்முன்
இவைகள்யாவும் வெறுமை. (ஐயனே)

3. செழுமையாகிய வண்ணமலர்கொள்
சிங்கார வனக்காட்சி
அழகின்ஆலய மானஉன்முன்
அதற்கெத்தனையோ தாட்சி. (ஐயனே)

4. அதிசவுந்தர மயில்குயில்கிளி
யாதிபறவைக் கூட்டம்
விதியின் அவை செய்யுன்னழகின்முன்
வெட்கிப்பஞ்சுபோ லோட்டம். (ஐயனே)

5. சத்தஸ்பரிச ரசரூபகந்தந்
தான் அல்லாத பொருளே
எத்தன்மைஉன துருவென்றறிய
இன்பக்காட்சி அருளே. (ஐயனே)

6. பதியில்நீசெய் பலபொருள்களைப்
பார்க்கபார்க்க வடிவே
அதிசயம்தரும் உன்தன் அற்புத
அழகினுக்குண்டோ முடிவே. (ஐயனே)

7. பிறந்தநாள்முதல் தாயைக்காணுப்
பிள்ளை தன்னை ஒத்தேனே
சிறந்தவேத நாயகாஉன்மேல
சிந்தையாவும் வைத்தேனே. (ஐயனே)

---

44. இராகம்-மாஞ்சி-ரூபகதாளம்.

பல்லவி.

என்னைநீ ஆளுவாய்-ஏகனே-யோகனே-என்னை.

அநுபல்லவி.

பொன்னைமாதைப்பூவை எண்ணம்
பூண்டுநான்கெடாத வண்ணம். (என்னை)

சரணங்கள்.

1. யாதனுசரீரமே யாதுமில்லைசாரமே
வாதபித்தவிகாரமே வாதனைகள் அபாரமே
மலநிவாரணு வடிவபூரணு
நலஉதாரணு ஞானகாரணு.(என்னை)

2. எந்தநாளும்கிலேசமே என்னெஞ்சிற்பிரவேசமே
பந்தவினையைநாசமே பண்ணிநீசெய்வாசமே
பதிதபாவனு பரமஜீவனு
அதிகசோபனு அகிலஸ்தாபனு.(என்னை)

3. அன்னைதந்தைநீ அல்லவோ ஆயிரந்தரஞ்சொல்லவே
என்னைமாயைகொல்லவோ எங்குநான்இனிச்செல்லவோ
ஏகபேதகா இனியசாதகா
வேதநாயகா விமலதாயகா.(என்னை)

## 45 இராகம்-சைந்தவி-திரிபுடைதாளம்.

பல்லவி.

ஏழைக்கிரங்கலொண்ணுதா இந்த-ஏழை

அநுபல்லவி.

ஆழக்கடல்உலகை ஆளும்விநோதா. (ஏழை)

சரணங்கள்.

1. சாடும்பிரசண்டக் காற்றுலே-திசை
தப்பியேஅலைபடும் கப்பலைப்போலே
நாடும்பிரபஞ்ச மாலே-என்னை
நைவிக்கவாடினே னன்புவிமேலே. (ஏழை)

2. நீசெய்வதெல்லாம் சகாயம்-இங்கே
நிரந்தரம்என்செய்கை யாவும்அநியாயம்
ஈசனேநின்பத நேயம்-எனக்
கெள்ளளவுமில்லை ஈதென்னமாயம். (ஏழை)

3. அற்பசுகத்துக் குழைத்தேன்-பாரில்
அநுதினம்ஆயிரம் பொய்சொல்லிப்பிழைத்தேன்
பற்பலதீவினை இழைத்தேன் துன்பப்
பாரம்பொறுமலே பரிந்துன்னைஅழைத்தேன். (ஏழை)

4. ஆன்மபத்தினி மணவாளா அகி
லாண்டபிரமாண்ட அகண்டக்கோளா
வான்மகிழ் தீனதயாளா-தினம்
மகிழ்வேதநாயகன் வணங்கும்பொற்றுளா. (ஏழை)

### 46. இராகம்-தன்னியாசி-ஆதிதாளம்.

பல்லவி.

கருணாகரப்பரம்பொருளே-அடியனைக்
கண்பார்த்தருள்வாயே. (கருணா)

அநுபல்லவி.

இருணாசஞ்செயும் இரவிசமான
தெருணாடிய தேஜோமயம்ஆன. (கருணா)

சரணங்கள்.

1. தோன்றினநாள்முதல் சுகுணமொன்றறியேன்
சொப்பனந்தன்னிலுந் துர்க்குணம்பிறியேன்
ஈன்றவனீயென் என்றுமேகுறியேன்
என்னசெய்வாயோ வென்றேங்கினன்சிறியேன். (கருணா)

2. தரணியில்நான்ஒரு தருவெனமுளைத்தேன்
தமகுணம்யாவுமே சாகையாக்கிளைத்தேன்
கருமமாகியவிஷக் கனிகளைவிளைத்தேன்
கண்டனைசெய்வை யென்றஞ்சியேகளைத்தேன் (கருணா)

3. நிகிலலோகங்கட் கெல்லாம்நீயதிகாரி
நிச்சயமாஎன் மனம்நினக்கொருபாரி
அகிலந்தனிலே அந்தமனம்அகங்காரி
அடக்கிஆளாவிட்டால் அழியாளோநாரி. (கருணா)

4. அழகுக்காலயமான அமிதசுந்தரமே
அன்பருக்கருண்மழை பொழியுங்கந்தரமே
தொழுதிடும்வேதநாயகன் சுதந்தரமே
துணைநீஉனை நம்பினேனிரந்தரமே. (கருணா)

---

### 47. இராகம்-மோகனம்-ஆதிதாளம்.

பல்லவி.

ஏனின்னம் தாமதமையா
என்னிடம்வர.

அநுபல்லவி.

தானேஉமக்குமுத்தித் தலமொன்றுநிலையோ
வானமுத்தரைவிட்டு வரமனமிலையோ. (ஏனின்)

சரணங்கள்.

1. சூரியனைத்தூண்ட அகன்றீரோ-அந்தச்
சோமனுக்கொளிதரச் சென்றீரோ
பாரினைப்புரட்டியே நின்றீரோ - அதில்
பகல்இரவுண்டாக்க முயன்றீரோ
காரிலிருந்து கனமழைசொரிந்தீரோ
கற்பத்திற்சிசுக்களையே புரிந்தீரோ
சாரும்பல்லுயிர்க்குயிராய் விரிந்தீரோ
சர்வலோககாரியஞ் செய்துதிரிந்தீரோ.(ஏனின்)

2. அண்டகோடிகளைத் தூக்கினீரோ - நவம்
ஆகச்சிலஅண்டம் ஆக்கினீரோ
கண்டகர்உலகை நீக்கினீரோ - கடல்
கரையைக்கடவாமல் தேக்கினீரோ
அண்டும்பல்லுயிர்க்கமு தூட்டுகின்றீரோ
ஐம்பூதங்கட்கும் வேலைகாட்டுகின்றீரோ
மண்டும்கனிக்குச் சுவைகூட்டுகின்றீரோ
மலருக்குபலவண்ணந் தீட்டுகின்றீரோ.(ஏனின்)

3. மரஞ்செடிபயிர்கள் நிறைத்தீரோ - அவை
வளரவேதண்ணீரை இறைத்தீரோ
சுரர்கள் இசைகேட்டுக் களித்தீரோ - நல்ல
தொண்டர்இதயத்தில் ஒளித்தீரோ
பரமகிருபாகர பரஹிதநேசரே
பரமதகண்டன பாயவிநாசரே
சருவவிநோத சராசரவாசரே
தாசன்வேதநாயகன் தன்பிராணேசரே (ஏனின்)

48. இராகம்-மத்தியமாவதி-ரூபகதாளம்.

பல்லவி.

இவ்வளவுதான்ஐயனே-அதிகம்அல்ல
இரங்கிய யருள்மெய்யனே

அநுபல்லவி.

அவனியில்வளரும் மூவாசையைப்பரிகரி
எவளவுமேதுன்பம் இல்லாமல்ஆதரி
இதயமலர்தரி விதனமதுபிரி
நிதமும்அருள்புரி இதுவேசரிசரி. (இவ்வளவு)

சரணங்கள்.

1. எனைஎந்நாளும் நீங்காதே - நான்போம்
இடமெங்குங்கூடவாபின் வாங்காதே
வினையனென்றென்மேற்கோபம் வீங்காதே-மன
வேதைசுமக்கஎன்னால் தாங்காதே
நினைவிலுந்தீதைநான் நினையாமற்பார்த்திரு
நித்திரைசெய்யும்போதென் பக்கத்தில்காத்திரு
நெடியநிலைபெரு கொடியபிழைபொறு
அடியன்மனமுறு கடிதுயர்அறு. (இவ்வளவு)

2. மாயையில்மனம்புக ஓட்டாதே - என்னை
வஞ்சனைக்காளென்று சுட்டாதே
ஆயிரந்தண்டம் என்சொல்தட்டாதே - உன
தனுக்கிரகமின்றி நலங்கிட்டாதே
நாயேன்விரும்பிய நல்லவரங்கள்கொடு
நரகையடைத்துமோக்ஷநாட்டைத்திறந்துவிடு
நளவுகொடுகொடு-சினமும்விடுவிடு
தினமுமகிழ்வொடு-களசுகுணம்நிடு. (இவ்வளவு)

3. நலமன்றிக்குறையை ஆராயாதே-பெரு
நன்மைகள்கொடிப்பதில் ஓயாதே
பலவேலைஇட்டேனென்று காயாதே-அற்பப்
பாக்கியம்நான்கேட்கினும் ஈயாதே
புலனில்வேதநாயகன் புகழும்சுகுணசீலா
பூதபவிஷியவர்த்த மானமெனுந்திரிகாலா
போதமழைபொழி-மாதர்மயலழி
பாதகமதொழி-ஏதமறவிழி (இவ்வளவு)

---

## 49. இராகம்-சாரங்கா-அடதாளசாபு.

பல்லவி.

ஆதரித்திடநல்ல தருணம்-என
தையாஉனக் கனந்தஞ்சரணம். (ஆதரி)

அநுபல்லவி.

பாதகனாசனா பரமகிருபாசனா
சாதகமோசனா-தர்மப்பிரயோசனா. (ஆதரி)

சரணங்கள்.

1. என்பழிமறைப்பதில் யானையதப்பாதாளம்
இதரர்பழிதூற்றலில் என்வாய்பெரியமேளம்
அன்பின்மனப்பேராசை அம்புவியிலும்நீளம்
அண்டம்வசமானாலும் அடங்காப்பெரும்வேதாளம்
ஆட்டிமயல்வலை - பூட்டிஅநுதினம்
கோட்டிசெயும்வினை - ஓட்டிஅடியனை. (ஆதரி)

2. ஓடிஅலையநெஞ்சுக் குலகமும்வானும்அற்பம்
உன்னிடம்வரவென்றால் ஒழியாதஅசந்தர்ப்பம்
தேடிநற்கருமங்கள் செய்வதுங்கஜகர்ப்பம்
தீவினைசெய்வதேஎன் சிந்தையின்சங்கற்பம்
திருத்தமுடனேஎன் கருத்துநலமிசைப்
பொருத்தமுறச்செய்து வருத்தந்தொலைத்தெனை. (ஆதரி)

3. என்குறைகாணவென்றால் என்னிருகண்ணும்ஊனம்
இதரர்பிழைக்காணக்கண் இரவிகோடிசமானம்
வன்கண்மொழிகளுக்கென் வாயேமுக்கியஸ்தானம்
மதுரச்சொல்பேசவென்றால் மாறாததீர்க்கமோனம்
வாதமொடுபல பூதகாரண
வேதநாயக நீதனேஎனை. (ஆதரி)

---

50. இராகம்-நாதநாமக்கிரியை-திரிபுடைதாளம்.

பல்லவி.

உன்னைநம்பினேன்ஐயனே-எனையாதரி. (உன்னை)

அநுபல்லவி.

உன்னைநம்பியஏழை தன்னைமுகம்பாராமல்
அன்னைபிதாவேநீ கைவிடலாமா
நான் கெடலாமா
துன்பப் படலாமா. (உன்னை)

சரணங்கள்.

1. தனமுமின்னார்கள்பு வனமும்உலகவாழ்வின்
கனமும்வேண்டிலேன்இது தேராயோ
தினமும்உனைக்கருது மனமும்உளதுதரி
சனமும்வேண்டினன் அருள்கூராயோ
மருள் தீராயோ
பொருள் தாராயோ. (உன்னை)

2. படிமீதினில்எண்ண முடியாதஉதவிகள்
அடியேனுறச்செய்த பெரியோனே
கொடியேன்உனே அரை நொடியாகிலுந்தொழும்
படியேஅருள்நலம் பிரியானே
தூயர்க் குரியானே
தீயர்க் கரியானே. (உன்னே)

3. அயமேபெருங்கல்லின் மயமேயெனும்இரு
தயமேமெழுகென உருகாதோ
ஸ்வயமேபரமாதி சயமேவேதநாயகன்
நயமேவினேசெய்வம் பருகாதோ
துன்பு கருகாதோ
இன்பு பெருகாதோ. (உன்னே)



51. இராகம் பந்துவராளி-ரூபகதாளம்.

பல்லவி.

கடைக்கண்ணுல் எனேப்பாராய் உன
தடைக்கலம் வினே தீராய் (கடைக்)

அநுபல்லவி.

கிடைக்கொண்ணுப் பதந்தாராய் நலம்
படைக்கவேஅருள்கூராய் அருட்
கொடைக்குநானென்னவே யவதரித்த
கோலாகல-மூலாஅநு-கூலாகுண-சீலா-நிதம். (கடைக்)

சரணங்கள்.

1. வஞ்சமாயையில் ஆழ்ந்தேன்-ஒரு
தஞ்சமென்றுன்னடி தாழ்ந்தேன்
அஞ்சலென்றேஎனே ஆதரித்தாளுவாய்
ஐயாமிகு-பொய்யால்மனம்-நையாதருள்-மெய்யா-ஒரு

2. ஐயனே தீரா யென்பாபம் அருள்
செய்யஉனக் கென்னலோபம்
வையகமாதி வளர்அண்டம்யாவினும்
வாசாபுவ-நேசாமற-நாசாபிர-காசா-ஒரு. (கடைக்)

3. அஞ்சலெனில் உன்வாய் நோமோ ஏழை
நெஞ்சம்வருந்திட லாமோ
பஞ்சமோகைப்பொருள் கொஞ்சமோபூபரி
பாலாஅநு-கூலாஒரு-மேலாமுதல்-நூலாஒரு (கடைக்)

4. இத்தரைமீதினில் நீயே நல்ல
பத்தரைக்காக்கவந் தாயே
சித்தமுவந்தெனைநித்தமும் ஆளெளிர்
தேகாகன யோகஅதி-தியாகாதனி-ஏகாகுளிர் (கடைக்)

5. பூதலம்போற்றும்பொற் பாதா அரு
மாதவஞானப்பிர சாதா
வேதநாயகன்பாடுந் தமிழ்க்கருள்
வேதாஉயர்-நீதாகன-தாதாநய-போதரஉன் (கடைக்)



52. இராகம் அசாவேரி-திரிபுடைதாளம்.

பல்லவி.

பாசத்தால்மனம்வாடினேன்-உந்தன்
வாசத்தாளமலர்கூடினேன்

அநுபல்லவி.

நேசத்தோர்கள்கை வல்லியமே உயர்
நிர்மலாதித்த துல்லியமே கன
மாசற்றோங்கும் பிரபல்லியமே ஜெகம்
மகிழும்பக்தவாற் சல்லியமே மல (பாசத்)

சரணங்கள்.

1. நினைவிலேன் பிழையாவுமே எண்ண
நினைக்குந்தானென்ன சாத்தியமா
எனைவருத்தும் இந்திரியப்பேய்தனக்
கித்தனை ஆகாத்தியமா
வினைஎனக்கு விரோதியா என்றும்
விலகிடாக்கர்ம வியாதியா கொடு
மனமுமே பிரதிவாதியா கெட்ட
மாயை என்ன தாயாதியா ஐயா (பாசத்)

2. இருதலைக்கொள்ளி எறும்புபோலெனக்
கிடைவிடாமன                வாட்டமே
மருவும்பந்தப்பசாசு தன்னொடு
மாறிடாத                போராட்டமே
கருமமாயா                விகாரமே செய்யும்
கலகஜாலம்                விஸ்தாரமே நல்ல
தருமம்எனக்குத்                தூரமே பின்னும்
தப்புகள்கற்பக                பாரமே ஐயா                (பாசத்)

3. வளர்கல்லியாணத்தில் தாலிபூட்டிட
மறக்குமுடர்கல்                போலவே
தளர்பிரபஞ்சவியாபாரத்தால்உன்தன்
தாள்மறந்தனன்                சாலவே
உளவியாதிக்கா                ரோக்கியமே நிதம்
உன்னுவோர்கள் மனோக்கியமே நலம்
விளையமாமறை                வாக்கியமே தொழும்
வேதநாயகன்                பாக்கியமே பந்த                (பாசத்)

——(*)——

53. இராகம் கன்னடகௌளே-ஆதிதாளம்

பல்லவி.

ஆதிபரமநாதா-ஞான-ஜோதிதரஷண்ணுதா

அநுபல்லவி.

பூதலம்பரவும் விநோதனேகனஅ
நீதமாய்இருள் பேதமாகவே.                (ஆதி)

சரணங்கள்.

1. காமக்குரோதமதம்                லோபம் அகங்
காரம்பொய்மாற்சரியங்                கோபம் இன்னும்
பூமியிற்பலபல                பாபம் செய்யும்
புல்லன்மனம் அவித்யா                ரூபம் நல்ல.                (ஆதி)

2. பெண்டுபிள்ளைகள்                சமுசாரம் முதற்
பேசும்லௌகிக                வியாபாரம் தன்னில்
மண்டுமேமோகாந்த                காரம் துயர்
மாற்றியருள்வை                நிர்விகாரம் நல்ல.                (ஆதி)

பாவக்கடல்கடக்கும் கலமேதொண்டப்
பயிர்கள்வளருந்தெய்வ நிலமே களை
நாவலர்போற்றிடும் நிர்மலமே வேத
நாயகாநானுன் அடைக்கலமே. (ஆதி)



54. இராகம்-கரகரப்பிரியை-ரூபகதாளம்.

பல்லவி.

இந்தவரந்தருவாய் எனக்
கெந்தவரங்களு மில்லையென்றாலும்.

அநுபல்லவி.

சுந்தராகாகத் துலங்குந்தெய்வீகனே
சந்ததமும்புவி தாங்குமநிர்வாகனே. (இந்த)

சரணங்கள்.

1. காயநிமித்தங் கலங்கி னையாமல்
கண்டவர்க்கெல்லாம்நான்தொண்டு செய்யாமல்
மாயாப்பிரபஞ்சத்தில் மாட்டி வையாமல்
மாதர்கண்ணம்பென் மனதில் தையாமல். (இந்த)

2. எங்கெங்குமேஉன் னுருவாய் மின்ன
எண்ணம்வேறின்றி உனைமன் முன்ன
மங்களநாமமென் வாய்நிதம் பன்ன
வார்த்தைகள்யாவுமுன் வார்த்தையாய் மன்ன. (இந்த)

3. சுத்தசைதன்னிய நிலைமையில் சார
தோஷகர்மானுபவர் தங்களுந் தீர
அத்தனேநித்த முனக்கன்பு கூர
ஆனந்தவீட்டிலே நான்வந்து சேர (இந்த)

4 சூதுபொறாமைபொய் கோபமில்லாமல்
சோரமுலோபந்துன் மார்க்கங்கல்லாமல்
வேதநெறியை விலகிநில்லாமல்
வேதநாயக விளம்பஞ்சொல்லாமல் (இந்த)

### 55. இராகம்-கமாஸ்-ரூபகதாளம்.

பல்லவி.

ஏகபராபரனே-கருணைப்பிர
வாகமனோகரனே.

அநுபல்லவி.

தேகமுறும்பல மோகஉபாதிகள்
ஏகஎனக்கு விவேகமருந்தருள். (ஏக)

சரணங்கள்.

1. சஞ்சலமானேனே-மனம்நொந்து
தளர்ந்துபோனேனே
அஞ்சலெனத்தானே-அடியேனை
ஆண்டருள்வாய்கோனே
பஞ்சபூதாதிபிரபஞ்சமெலாஞ்செய்து
தஞ்சம்செயும்நிஷ்பிர பஞ்சப்பொருளான. (ஏக)

2. சங்கடமாற்றாயோ-எளியேன்
தன்முனந்தோற்றாயோ
இங்கிதஞ்சாற்றாயோ தமியனை
யேகனையேற்றாயோ
அங்குமிங்கும்புவி-எங்கும்உயிரெனத்
தங்கும்படி-அருள்-பொங்குங்குணகர. (ஏக)

3. நேயர்சகாயனே-அருமறை
நீதிசொல்வாயனே
தூயநிகாயனே-அமரர்கள்
சூழ்சமுதாயனே
மாயவிஷயாதி-நோயணுகாமலே
தாயெனவேவேத நாயகனேஆளும். (ஏக)

——(*)——

### 56. இராகம்-எதுகுலகாம்போதி ஆதிதாளம்.

பல்லவி.

கருணைகடாக்ஷஞ்செய்வாயே-சுவாமி

அநுபல்லவி.

மருணைசமாகவே மகிழ்வாகநீயே. (கருணை)

1. அரியாயம் உலகவிர்த்தாந்தம் இதில்
அழியாதவண்ணம்நீ அருள்வைஉபசாந்தம்
தனிஉன்றனோடு மேகாந்தம் கொள்ள
சர்வதாகாலமு மௌனதுசித்தாந்தம். (கருணா)

2. நாமரூபகமாம் பிரபஞ்சம் ஆன்ம
நன்மையைஅழிக்கும் எந்நாளும்இதுநஞ்சம்
காமவிஷயாதிகளில் நெஞ்சம் நாளும்
கலங்கினேனின்பாத கமலமேதஞ்சம். (கருணா)

3. போதாந்தநிலைமை யுறுதேவே நல்ல
புவனகோடிகள்செய் தளிக்கின்றகோவே
வேதாந்தரச மொழுகுகாவே நிதம்
வேதநாயகன்இதய வண்டுவளர்பூவே. (கருணா)

---

57. இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

ஆதிபரமநாதா-நல்ல
அற்புதநற்பதம்பெறப் பொற்பதம்எனக்கருள்செய்

அநுபல்லவி.

ஓதரும்உயிர்க்குயி ராகிஎங்கும்நிறையும்
பூதசராசரப் பொருள்கள்எல்லாம்உறையும். (ஆதி)

சரணங்கள்.

1. ஜீவன்பிழைக்கும்வழி அறியேனே நான்
தெற்குவடக்கறியாச சிறியேனே
பாவலகரிகொண்டு வெறியேனே பந்த
பாசக்களையைவெட்டி எறியேனே
ஆவலுடனேஎங்கும் அலைந்தகம்வெம்பினேன்
தேவநாயகனே உன்திருவடிநம்பினேன். (ஆதி)

2. ஐயனேஎனக்கருள் ஊட்டாயோ கெட்ட
அகங்காரமெனும்பேயை ஓட்டாயோ
உய்யவழியெனக்குக் காட்டாயோ எந்தன்
உள்ளத்தில்உன்பதத்தை நாட்டாயோ
பொய்யுலகநடையைப் பொருளெனநாடினேன்
மெய்யறிவில்லாமலே மிகமிகவாடினேன்(ஆதி)

